# அறிவை விரிவாக்கும் அற நூல்கள்

[திருவிவிலியமும் பதினெண்கீழ்க்கணக்கும் ஓர் ஒப்பாய்வு]

தா. ஜோ. ஜூலியஸ்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# அறிவை விரிவாக்கும் அறநூல்கள்

(விவிலியமும் பதினெண்கீழ்க்கணக்கும் ஓர் ஒப்பாய்வு)

தா. ஜே. ஜூலியஸ்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

கிறித்துவமும் தமிழும் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : பேராயர் இரா. அருளப்பர்)
வரிசை எண் : 9

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Ar̲ivai virivākkum ar̲anūlkaḷ (Viviliyamum Patin̲eṇkiḻkkaṇakkum ōr oppāyvu) |
| Author | : | Mr. T. Joseph Julius M.A.<br>4/45. 11th Trust Cross Street<br>Mandaivelipakkam<br>Chennai |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 656 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xii + 92 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 45/- (Rupees Forty Five Only) |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Ethics |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பலவும் மனித வாழ்வுக்கான அறநெறிகள் கொண்டவை ஆகும். சங்கம் மருவிய காலத்து நூல்கள் அவை. எனினும் சங்க இலக்கியங்களிலேயே அறம் குறித்த கருத்துக்கள் பல பாடல்களில் வெளிப்பட்டுள்ளன.

பக்தி இலக்கியக் காலங்களில் சமயக் குரவர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் அருளிச் செய்துள்ள பாடல்களில் சமயவழிப்பட்ட அறச்சிந்தனைகளும் பொதுவான அறச் சிந்தனைகளும் வெளிப்பட்டன.

விவிலியம் உலகில் தோன்றிய பல அறச்சிந்தனைகள் கொண்ட நூல்களுள் ஒன்றாகப் போற்றப்படுகின்றது.

> "பைபிள்" என்ற பதம் செம்மொழி இலத்தீனுக்குப், பிறிதொரு செம்மொழி ஆகிய கிரேக்கச் சொல் "பிபிலியா" அல்லது "நூல்கள்" என்பதன் திரிபு ஆக வந்தது ஆகும் (பக். 7)..

> **அன்பின் உள்ளான் புறத்தான் உடலாய் உள்ளான்**
> **முன்பின் உள்ளான் முனிவர்க்கும் பிரான் அவன்**
> **அன்பின் உள்ஆகி அமரும் அரும் பொருள்**
> **அன்பின் உள்ளார்க்கே அணை துணை ஆமே**
>
> **(திருமந்திரம் 279)**

சைவ சமய நூல்கள் அனைத்தும் போதிக்கக் கூடிய கருத்துகளை உணர்ந்து பார்ப்போமாயின் அன்புடைமையாகும். அன்பே சிவம் எனும் தத்துவத்தை முன் வைத்து எழுதப்பட்ட சைவ சமய நூல்கள் யாவும் மானுட நேயத்திற்கு வளம் சேர்க்கத் தக்க கருத்துகளைக் கொண்டுள்ளன.

உலகச் சமய நூல்கள் பலவற்றுடன் நமது தமிழிலக்கிய அறச்சிந்தனைகளை இயைபுபடுத்தி ஒப்பியல் நோக்கில் நிறைய

ஆய்வு நூல்கள் வரவேண்டிய தேவையினை இந்நூல் நமக்கு உணர்த்திக் காட்டுகிறது.

*அறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்*
*மறவா திதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்*
*உண்டியு முடையு முறையுளு மல்லது*
*கண்ட தில்லெனக் காவல னுரைக்கும்*
*(மணிமேகலை 25 : 228 –31)*

சங்க மருவிய காலத்தை அறநெறிக் காலமென்று சொல்லிடத்தக்க வகையில் சிலம்பு சமண அறநெறிக் கருத்துக்களையும் மணிமேகலை பௌத்த அறநெறிக் கருத்துக்களையும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் சமண அறநெறிக் கருத்துக்களையும் கொண்டு விளங்குகின்றன. இலக்கியங்கள் சமயப் பிரச்சாரங்களைச் செய்யும் நோக்கில் உருவாக்கப் பட்டவை என நாம் காண நேரினும் அவற்றினூடாக வெளிப்படும் அறநெறிக் கருத்துக்கள் சமூகத்திற்குத் தேவையானவை என நாம் விளங்கிக்கொள்ள முடிகின்றது.

இந்நூலாசிரியர் முதுமொழிக்காஞ்சி, திருமந்திரம், திருக்குறள் என்பன போன்ற தமிழ் இலக்கிய நூல்களில் காணலாகும் அறநெறிச் சிந்தனைகள் பலவற்றை விவிலியக் கருத்தோடும் பொருத்தி ஆராய்ந்திருப்பது பாராட்டுக்குரிய பணியாகக் காணமுடிகிறது.

*கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை*
*வல்லிடிக் காரர் வலிகயிற்றாற் கட்டிச்*
*செல்லிடு நில்என்று தீவாய் நரகிடை*
*நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே (திருமந்திரம் 198)*

உலகெங்கும் மனிதன் மனிதனைக் கொல்லக் கண்டுபிடித்த கொலைக் கருவிகள் விதவிதமானவையாகும். காலந்தோறும் நாட்டுக்கு நாடு இம்முறையில் மனிதர்களுக்குப் பலவிதமான தண்டனைகள் கொலைக் கருவிகள் வழியாக அளிக்கப்பட்டு வந்தன. இன்று மனித உரிமைச் சிந்தனையாளர்கள் மனிதப் படுகொலை எந்த வகையிலும் கூடாது என்னும் கருத்தியலை முன் வைத்துச் செயல்பட்டு வருகின்றனர். இந்தச் சூழலில் நம் இலக்கியங்களில் ஏலவே

அறம் குறித்த சிந்தனைகளை மீண்டும் நாம் எண்ணிப் பார்த்துச் செயல்பட இந்நூலாசிரியரின் இந்நூல் உறுதிபட உதவும் என நம்பிக்கை கொள்ளலாம்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு நூலின் மெய்ப்புகளைத் திருத்திப் பதிப்பித்த முனைவர் ஆ. தசரதன் அவர்கள், இந்நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், கணிப்பொறியாளர் திருமதி பா.கௌசல்யா ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## ஆசிரியரைப்பற்றி



சென்னை மயிலைவாசியாகிய திரு. தா. ஜோசப் ஜூலியஸ், தண்டமிழ்க் கொண்டல் சிதம்பரம் சுவாமிநாதன் அவர்களின் மாணாக்கர். சென்னை இலயோலா கல்லூரியில் எம்.ஏ. பொருளாதாரம் மற்றும் மதராஸ் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. கிறிஸ்துவ இறையியல் படித்தவர்.

தமிழக அரசின் தலநிதி தணிக்கைத் துறையில் உதவி இயக்குநராகப் பணிபுரிந்து அண்மையில் ஓய்வு பெற்றவர்.

''ஐம்பெரும் காப்பியங்களில் இந்து மதம்'', "திருமந்திரமும் திருவிவிலியமும்", "பாட்டுத் தொகை" போன்ற புத்தகங்கள் எழுதியவர். முதலிரண்டும் ஆராய்ச்சி நூல்களாக இருக்க, பின்னது மரபுக் கவிதை தொகுதி ஆகும்.

பள்ளி, கல்லூரி நாட்களில் இருந்து தமிழார்வ மிகுதியால் தமிழ் நூல்களைப் படித்துத் தம் தனித் திறமையை வளர்த்துக் கொண்டுள்ள இவர் ஆங்கிலத்திலும் கவிதை படைக்க வல்லவர்.

# என்னுரை

*நுண்மொழி நோக்கிப் பொருள் கொளலும், நூற்கு ஏலா*
*வெண்மொழி வேண்டினும் சொல்லாமை—*
*நல்மொழியைச்*
*சிற்றினம் அல்லார்கண் சொல்லலும் இம் மூன்றும்*
*கற்றறிந்தார் பூண்ட கடன் (திரிகடுகம் 32)*

கற்றறிந்தார் பூண்ட கடன் என்ன என்பதை நற்றமிழ்க் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய, மும்மூன்றாக அறங்களை உரைக்கும் திரிகடுகம் செம்மொழியில் செப்புகிறது.

பேசுபவரையோ அவர் சார்ந்த சமயத்தையோ நோக்காமல்,

*எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு (திருக்குறள் 423)*

என்ற குறள் மொழிக்கேற்பத் தமிழிலக்கிய அறநூல்களைச் சமய அற நூல்களுடன் ஒப்பு நோக்கி இணக்கம் காண்பது இனிது என உணர்ந்தேன்.

இனிய தமிழில் இசைபடக் கூறும் அறநூல்களாகிய பதினெண்கீழ்கணக்கு நூல்களையும் விவிலியம் வெளிப்படுத்தும் மெய்ப் பொருளையும் ஒப்பு நோக்கி உரைக்கத் தலைப்பட்டேன்.

*ஆழ்ந்த மறைப்பொருளை வெளிப்படுத்துபவர்*
*அவரே! இருளில் உள்ளதை அறிபவர் அவரே!*
*ஒளியும் வாழ்வது அவருடனே!*
*(தானி. 2:22) திருவிவிலியம்*

என்பதாலும், எனக்கு ஆற்றலும் ஞானமும் தந்த நம் மற்றும் நமது முன்னோர்களின் இறைவனுக்கு நன்றியும் புகழும் கூறுகிறேன்.

ஞானத்திற்குச் செவிசாய்த்து, மெய்யறிவில் மனத்தைச் செலுத்தி, நன்னெறிகளைச் சிந்தையில் இருத்திக் கொள்ள வேண்டும். செல்வத்தை நாடுவது போல், ஞானத்தை நாடிப் புதையலுக்காகத் தோண்டும் ஆர்வத்தோடு அதைத் தேட வேண்டும். என்ற தாகத்தின் விளைவே, எனது தேடலின் பயனே இந்த நூல்.

அன்பையும், மனிதப் பண்பையும், தருமத்தையும், ஒழுக்கத்தையும், பேணிக்காக்க வேண்டிய சீலங்கள் எனப் போதிக்கும் தமிழிலக்கியத்தில் உள்ள அறநூல்களையும், விவிலியத்தையும் ஒப்பு நோக்கி, தவறான பாதையில் வாழ்வோரைச் செப்பனிட்ட பாதைக்கு அழைக்கும் முயற்சியாக இந்நூலை வடித்துள்ளேன்.

தன்னை அறிதலைத் தலையாய பாடமாக்கும் அறநூல்கள் எனக்குப் பயன் அளித்தன போல் பிறரும் படித்துப் பயனுற வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் படைக்கப்பட்ட இந்நூல் ஓர் ஒப்பாய்வு மட்டுமே. சமைக்கப்பட்ட அருஞ்சுவை உணவில் உப்பு உள்ளதா எனச் சுவைத்துப் பார்ப்பது போல அறநூல்களில் ஆங்காங்கே ஒத்த கருத்துக்கள் ஓங்கி ஒலிக்கும் நேர்வுகளை, சிதறிய முத்துகளைச் சேர்த்து எடுப்பது போல் கோத்துத் தொகுத்துள்ளேன்.

இந்நூலைச் சமைத்திட எனக்கு அழைப்பு விடுத்து உற்சாகப்படுத்திய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராக விளங்கும் பேராசிரியர் முனைவர் கரு.அழ. குணசேகரன் அவர்களுக்கு என் நன்றி மலர்களைத்

தூவுகிறேன். அவரோடு இணைந்து, என்னை அடையாளங் கண்டு எனக்கு உற்சாகம் அளித்து ஊக்கிய அந்நிறுவனத்தின் துணை இயக்குநர், திரு. வீரபாகு அவர்கட்கும் மற்றும் நிறுவனப் பணியாளர்கட்கும் நன்றி கூறுகிறேன்.

எனது முயற்சிகள் அனைத்திலும் உதவி எனக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்கும் சென்னை, உ.வேசா. நூலகக் காப்பாட்சியர், திருமிகு ம.வே. பசுபதி அவர்கட்கும் வணக்கம் சொல்லி என் நன்றியை நவில்கின்றேன்.

தா. ஜோசப் ஜூலியஸ்

# பொருளடக்கம்

# 1. அறநூல்கள்

### *அன்பும் அறனும் பண்பும் பயனும்*

விண்ணுக்கும் மண்ணுக்கும் பாலம் அமைக்க நினைத்தால் அது விஞ்ஞானம். விண்ணுக்கும் மண்ணுக்கும் பாலமா என எள்ளி நகையாடினால் அது அஞ்ஞானம். விண்ணுக்கும் மண்ணுக்கும் பாலம் இறைவனால் மனிதர்க்கு உள்ளம், ஆன்மா, மனச்சான்று என்ற கருவிகள் மூலம் ஏற்கெனவே பாலம் கட்டப்பட்டுள்ளது என உணர்வது மெய்ஞ்ஞானம். இத்தகைய மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்ற தமிழர் வாழ்வில் அன்பும், அறனும் அவை தரும் பண்பு நலன்களும் சிறந்து விளங்கியதைத் தமிழ் இலக்கிய வரலாறு உணர்த்துகிறது.

அன்னையின் மடியில், "முட்டை பொறிந்தது முந்நூறு நாளில்". ஏதோ ஒரு காரணத்தால் பின்னையொரு நாளில் மரணத்தில் மனித வாழ்வு முடிகிறது. இவ்வாறு பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட கால தூரத்தை மனிதன் கடக்கும் பயணமே வாழ்க்கை. இப்பயணத்தைப் "பிறவிப் பெருங்கடல்" எனக் கூறினாலும், தம்மோடு உடன் பயணிக்கும் மனிதரிடம் ஒவ்வொருவரும் காட்டும் அன்பு, நேயம் உணர்வுகளின் வெளிப்பாடாக ஒளிர்கின்றன. மனிதரின் சாதாரணப் பேச்சு மொழிகளில், பாடல்களில், பாடல்களின் உட்பொருளில் சிப்பிக்குள் முத்தாகச் சிலிர்த்தெழும் இப்பண்புகளை நம்தம் தமிழ் மூதறிஞர், நாம் செய்த பெருந்தவப் பயனாக நமக்குப் பலவற்றைப் படைத்துச் சென்றுள்ளனர்.

அனைத்து உயிர்களிடத்தும் அன்பு கொண்டு, அன்போடு உறவு கொண்டு, மனித உணர்வுகளை மதித்து நடக்க நமக்குக் கற்பிக்கப்பட்ட பண்புகளைப் பட்டியலிட்டுக் கூறும் நூல்கள் அறநூல்கள் ஆகும். பருப்பொருள் அல்லாத

பண்பினையும், நேயத்தையும் நுண்பொருளாகிய அறிவால் இவை அறிவிக்கின்றன.

''பண்பு'' என்ற சொல்லை மூலமாகக் கொண்டு பிறந்தவையே “பண்படு”, “பண்புடைமை”, “பண்பாடு” ஆகியன எனக் கொள்வோம்.

**பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல் (16:7)**

என நெய்தற்கலியும்,

**பயனும் பண்பும் பாடறிந்து ஒழுகல் (160:2)**

என நற்றிணையும் ஒழுகலாறு எவ்வாறு வேண்டுமெனச் சங்கு கொண்டு ஊதும் சங்க இலக்கியத் தொடர்களாகும்.

இவ்வகையான அன்பு, அறம், பண்பு அதன் பயன் ஆகியவற்றை நன்கு அறிந்த தமிழ் மூதறிஞர்கள் “யாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக” எனத் தம் பட்டறிவையும், படிப்பறிவையும், தமக்கே உரிய மனித நேயத்தால் பிறர்க்கு எடுத்தியம்பிய நூல்களே அறநூல்கள் ஆயின. மனிதரின் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் பண்பட்ட உயர்நிலையில் அறம் பொருள் இன்பம் பயின்றிடும் போது மனிதன் புனிதனாகிடும் நெறியை அறநூல்கள் ஆரவாரத்துடன் ஒலிக்கின்றன. பண்பாட்டில் தலைசிறந்து விளங்கிய தமிழர்க்கு எப்படி இத்தனை அறநூல்களின் தேவை எழுந்தது என்பது சுவையான ஆய்வாக அமையும்.

### அறநூல்களின் தோற்றக் காரணம்

தனி மனித வாழ்வினைச் சமுதாயம், அரசியல், குடும்பம், சமயம், கலை, கல்வி, இலக்கியம், மொழி ஆகியவை பாதிக்கின்றன. கி.பி. 400 முதல் கி.பி. 900 என்ற ஐந்து நூற்றாண்டுகளில் சமுதாயம் பெரிய மாற்றமும் வளர்ச்சியும் புதுமையும் பெற்று விளங்கியது. இதற்கு அடிப்படைக் காரணங்கள் தமிழகத்தில் பேரரசுகள் சிற்றரசுகளாக மாறியமை, புறச் சமயத்தாரின் அரசியல் செல்வாக்கு செழித்தது, பிற கலாச்சார உறவுகளால் பண்பு நலன்கள் புறம்பாக்கப்பட்டுப் புதிய சீலங்கள் புகுத்தப்பட்டமை போன்றவையாகும். இவற்றால் சீர் குலைந்த தனி மனித வாழ்க்கை செம்மை அடைய வேண்டும். சமுதாயம் சீர் குலையாமல் நிலைபெறவேண்டும். ஆட்சியியல் சீர்மை

பெறவேண்டும். எனவே, குடும்பங்களில் ஏற்பட்ட கொந்தளிப்பு, அரசியல் மாற்றங்கள் தோற்றுவித்த சமுதாயச் சிக்கல் ஆகியவற்றை அமைதிப்படுத்தித் தீர்வு காணும் வழியை, நெறியை, ஆன்றோரும் சான்றோரும் புலவர் பெருமக்களும் மக்கள் பீதி அடையா வகையில் நீதிகள் ஓதினர்.

புறச்சமயங்களாகிய சமணம், பௌத்தம், வைதீகம் ஆகிய சமய நெறிகள் புகுத்தப்பட்டதால், அவை மக்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் அறநூல்களாகப் படைக்கப்பட்டன. இவ்வகை அறநூல்கள், ஆட்சி புரியும் அரசனை நெறிப்படுத்த முனைந்தன. மூதுரைகளாகிய பழமொழிகள், பயிலும் மக்கள் சுவைத்துப் பயனுறும் வகையில் பாலில் ஊறிய பழம்போல் அளிக்கப்பட்டன. உடலில் தோன்றிய பிணி நீக்கும் மருந்தாகச் சித்த மருத்துவ நூல்கள்அமைந்து, சமுதாயக் குறைகளை மறையச் செய்யும் அறங்களைத் திறம்பட நவிலும் நூல்களாகப் படைக்கப்பட்டன. இறைநெறி, கலைகள், தாளாண்மை போன்றவை புறச்சமயத்தாரின் போக்கினால் பாதிப்படைந்தன. இறைவனிடத்தில் செலுத்தும் அசைக்க முடியாத பக்தியால் வினைக் கட்டினின்று விடுதலை பெற்று, துன்பத்தைத் தொலைத்து இன்பம் அடையலாம் என மக்களின் இருண்ட வாழ்விற்கு நம்பிக்கை ஒளியை ஊட்டிய நாயன்மார்களும் ஆழ்வார்களும் படைத்த நூல்கள் பக்தி இலக்கியங்கள் எனப் போற்றப்பட்டன. இதனால் நாயன்மார்களின் திருமுறைகளும், ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களும் அறநூல் வரிசையினின்று பிரிக்கப்பட்டு, பக்தி இலக்கியங்களாகப் பகுக்கப்பட்டன. இவ்வாறு சைவம், வைணவம் சார்ந்த இவ்விரு பெரு நெறிகளும் மக்களால் மேற்கொள்ளப்பட்டுச் செழிக்கலாயின.

சமயக் குரவர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் அருளிச் செயல்களைக் கால அடைவிலும், அவர்கள் பின்பற்றிய நால்வகை மார்க்கங்களில் சற்புத்திர மார்க்கத்திற்கு முதன்மை வழங்கிய முறையின் அடிப்படையிலும் முறைப்படுத்தப்பட்டமையால் இவை “திருமுறை” எனப் பெயர் பெற்றன. இவர்கட்குத் திருமூலர் காலத்தால் முற்பட்டவர்.

ஆயினும் அவரது "திருமந்திரம்" சாத்திர நூலாகக் கொள்ளப்படுதலால் பத்தாம் திருமுறையாகத் தொகுக்கப்பட்டது.

திருக்குறள், நாலடியார், பழமொழி ஆகிய அறநூல்களில் பயிலும் அரிய கருத்துக்கள் "ஏழாம் திருமுறையாக" நம்பியாண்டார் நம்பியால் வகுக்கப்பட்ட நம்பி ஆரூரர் ஆகிய சுந்தரரின் தேவாரத்திலும் இடம்பெறக் காணலாம். இவ்வாறு காலத்தின் தேவைக்கேற்பத் தோன்றிய அறநூல்கள் பல உள்ளன. இவற்றுள் திருக்குறள், முதுமொழிக் காஞ்சி, களவழி நாற்பது ஆகிய நூல்கள் தவிர்த்து எஞ்சிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாகிய நாலடியார், பழமொழி நானூறு, நான்மணிக் கடிகை, திரிகடுகம், சிறுபஞ்ச மூலம், இன்னா நாற்பது, இனியவை நாற்பது, ஏலாதி, ஆசாரக் கோவை ஆகிய ஒன்பது நூல்களும் வாழ்வுக்கு வழிகாட்டும் அறநூல்கள் எனச் சுட்டிக் காட்டப் பொருத்தமானவை.

### அறநூல்களில் சிறப்புக் கருத்துக்கள்

கால மாற்றத்தால் மனிதரின் கோல மாற்றங்கண்டு எழுதப்பட்ட அறநூல்கள்அனைத்தும், உயிர்ப்பலி கொடுத்து உயிர்வதை செய்வதைத் தடுக்கும் வகையில் கொல்லாமையையும், புலால் மறுத்தலையும், மந்த மதியாற் செய்யும் தீச்செயல்கள் ஆகிய களவு, பொய் கூறல், பிறன்மனை விழைதல் ஆகியவற்றைக் கடிந்தும், உயர் பண்பு நிலை எய்திட வழிகளாகக் கல்வி, ஈகை, அறம் போன்ற கருத்துக்களை வலியுறுத்தியும் புலனடக்கம் கொண்டு, இனியன பேசி, பிறர்க்கின்னா செய்யாமல், அன்பு எனும் அறவழி நின்று வாழ்வதே வாழ்க்கை நெறி என ஓதுகின்றன. இந்நூல்களைப் படைத்தவர்கள் தமது மெய்ப்பொருள் கோட்பாடு கட்குட்பட்டு, அறம், பொருள், இன்பம் என்ற உறுதிப் பொருள்களை உரைப்பனவாக இவற்றைப் பாடினர்.

நியமம், நெறி என்றாலே இதனைச் செய்ய வேண்டும்; இதனைச் செய்யாதொழிய வேண்டும் என்ற கசப்பான மருந்து என உணர்ந்து, இனிய மொழியில் நெஞ்சினை நோக்கிப் பேசும் வகையில் இவற்றை உரைத்தனர்.

இவ்வாறு வாழ்வியலுக்குப் பயன்படும் அறங்கள், நீதிகள், அருங்கருத்துக்கள், நியமங்கள், முதுமொழிகள் பலவும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும், கிறித்துவ மறைநூலாகிய திருவிவிலியத்திலும் உரைக்கப்பட்டு மனிதரைச் சோதிக்கும் உரைகல்லாக விளங்குகின்றன. இந்நூல்களை ஒப்பு நோக்கித் தப்பாது கடைப்பிடிக்கவேண்டிய ஒழுக்கம், நியதி, சட்டங்கள் யாவை என்பது பற்றிப் பின்வரும் பக்கங்களில் ஆய்வோம்.

# 2. பதினெண்கீழ்க்கணக்கும் திருவிவிலியமும்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களாவன:

> நாலடி, நான்மணி, நானாற்பது, ஐந்திணை, முப்
> பால், கடுகம், கோவை, பழமொழி, மாமூலம்
> இன்னிலைய காஞ்சியுடன், ஏலாதி, என்பவும்,
> கைந்நிலையும் ஆம் கீழ்க்கணக்கு

என வரும் தனிப்பாடலால் அறியலாம். ஆயினும் இப்பாடலில் குறித்துள்ள வரிசை முறை இந்த நூல்களின் தோற்றம் பற்றியோ, பிற ஏதுக்கள் பற்றியோ அமைந்த வரிசைமுறை அன்று என்பதை நினைவிற் கொண்டு, எளிதில் மனனம் செய்து கொள்ளச் சாதகமாகப் பாடப்பெற்ற பாடலே என்பதை உணர வேண்டும்.

**நூல்களின் காலம்**

கீழ்க்கணக்கு நூல்கள் கி.பி.600 முதல் கி.பி.850ஆம் காலக்கட்டங்களில் எழுதப்பட்டவை. ஆயினும், இந்தக் கால ஆராய்ச்சி முடிந்த ஒன்றாகக் கொள்ள இயலாமற் தொடர்ந்த வண்ணம் உள்ளது. இந்நூல் தொகுப்பில் இடம்பெறும் பதினெட்டு நூல்களின் பெயர்களையும், அவற்றில் அடங்கியுள்ள பாடல் தொகையையும் வேம்பத்தூர் முத்து வேங்கடசுப்பு பாரதியார் 1849ஆம் ஆண்டில் தாம் இயற்றிய பிரபந்தத் தீபிகை எனும் நூலில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

> ஈர் ஒன்பதின் கீழ்க் கணக்கினுட் படும் வகை
> இயல்பு நாலடி நானூறும்;
> இன்னாமை நாற்பது; நான்மணிக் கடிகை சதம்;
> இனிய நாற்பான்; கார் அதே;
> ஆரு களவழி நாற்பது; ஐந்திணையும் ஐம்பதும்,
> ஐம்பதுடன் இருபானும் ஆம்;

அலகு இல் ஆசாரக் கோவைசதம்; திரிகடுகம்
ஐ-இருபது ஆகும் என்பர்;
சீருறும் பழமொழிகள் நானூறு; நூறதாம்
சிறுபஞ்சமூலம்; நூறு
சேர் முதுமொழிக் காஞ்சி; ஏலாதி எண்பதாம்;
சிறு கைந்நிலை அறுபது ஆகும்;
வாரி திணைமாலை நூற்றைம்பதாம்; திணைமொழி
வழுத்து ஐம்பதாம்; வள்ளுவ
மாலை-ஈர் ஒன்பதாய்ச் சாற்று பிரபந்தம்
வழுத்துவர்கள் புலவோர்களே

"ஈர் ஒன்பதாய்ச் சாற்று பிரபந்தம்" என இவை குறிக்கப் பெறுதலால், பக்தி இலக்கியமாகப் படைக்கப்பட்டு இருப்பினும் தமிழ் ஆய்வோர் இதனைத் தனியே "அறநூல்கள்" எனப் பிரித்துத் தனிச் சிறப்புச் செய்துள்ளனர்.

## அறநூல்கள் பகுப்பு

அறநூல்கள் எனப் பதினெட்டு நூல்கள் கூறப்பட்டாலும் திணைமாலை நூற்றைம்பது ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, கைந்நிலை, கார் நாற்பது ஆகிய நூல்கள் "அகம்" பற்றிய நூல்கள் ஆகும். அவற்றை நீதி நூல்களாகக் கொள்ள இயலவில்லை.

ஏனைய பதினொரு நூல்களாகிய திருக்குறள், நாலடியார், பழமொழி, நான்மணிக் கடிகை, திரிகடுகம், சிறுபஞ்ச மூலம், ஆசாரக் கோவை, ஏலாதி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, முதுமொழிக் காஞ்சி ஆகியவை அறநூல்கள் ஆகும். இந்நூல்களின் தனிச் சிறப்பு, ஆசிரியர் ஆகியவை பற்றி விரித்துரைக்காமல் இவற்றில் உள்ள சிறப்புக் கருத்துக்கள் மட்டுமே இவ்வாய்வுக்குத் தேர்ந்து கொள்ளப் பட்டுள்ளன.

## திருவிவிலியம் – பெயர் விளக்கம்

"பைபிள்" என்ற பதம் செம்மொழி இலத்தீனுக்குப், பிறிதொரு செம்மொழி ஆகிய கிரேக்கச் சொல் "பிபிலியா" அல்லது "நூல்கள்" என்பதன் திரிபு ஆக வந்தது ஆகும். "பிபிலியா" என்பது "பிப்ளோஸ்" என்ற சொல்லை வேராகக்

கொண்டது. இதற்குப் "பாபிரஸ்" அல்லது பேப்பர் என்று பொருள். இச்சொல்லும் பழங்காலக் கிரேக்கத் துறையாகிய ஃபினீயர்கள் நகரத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட சொல்லாகும். இந்தப் "பைபிள்" என்ற ஆங்கிலச் சொல்லே தமிழில் "விவிலியம்" என வழங்கப் பெறுகிறது.

"பாபிரஸ்" என்பது ஒருவகைப் புல். "பேப்பர்" என்றால் காகிதம். ஆயினும் அனைத்துக் காகிதமும் பைபிள் ஆகிவிடாது. "யூதயியல் சுவடிகள்" எனத் தோல் சுவடிகள் ஓலைச் சுவடிகள், உலோகச் சுவடிகள் பலவும் கிறிஸ்துவ மறைநூல் எனக் கிறிஸ்துவத்துக்குபின் 200 ஆண்டுகளில் தொகுக்கப்பட்டுள்ளன. ஆயினும் யூதர்களின் விவிலியமும் கிறிஸ்துவர்களின் விவிலியமும் நூல்தொகுப்பு முறையில் மட்டுமே மாறுபட்டு உள்ளன.

**ஆதாரச் சுவடிகள்**

யூதர்களின் விவிலியம் "எபிரேயச் சுவடிகள்" என எபிரேய மொழியில் முதன் முதலில் எழுதப்பட்டது. இவற்றில் சில நூல்கள் மட்டும் எபிரேய உட்பிரிவு மொழியாகிய "அராமேய்க்" மொழியில் உள்ளன. ஆனால் சிறிஸ்துவர்களின் விவிலியம் பழைய ஏற்பாட்டில் 46 நூல்களும் புதிய ஏற்பாட்டில் 27 நூல்களும் கொண்டு 73 புத்தகங்கள் அடங்கிய குறுநூலகமாகத் திகழ்கிறது.

தோபித்து, யூதித்து, 1-மக்கபேயர், 2-மக்கபேயர், சாலமோனின் ஞானம், சீராக் மற்றும் பாரூக் ஆகிய தலைப்புகளைக் கொண்ட ஏழு நூல்களை மறுப்பியக்கக் கிறிஸ்துவர்கள் பேதமல்லாதவை எனச் சேர்ப்பதில்லை. இதனால் அவர்களது விவிலியம் பழைய ஏற்பாட்டில் 39 நூல்களையும் புதிய ஏற்பாட்டில் 27 நூல்களையும் கொண்டு மொத்தம் 66 புத்தகங்களைத் தாங்கி வருகின்றது. இவ்வாறு 7 புத்தகங்களைச் சேர்க்காமல் விடும் மரபு மறுப்பியக்கக் கிறிஸ்தவர்கள் எபிரேய விவிலியத்தை மட்டும் மூலமாகக் கொள்வதால் ஏற்பட்டது. உரோமக் கத்தோலிக்கர், கிறிஸ்து பிறக்கும் முன்னரே கிரேக்க மொழியில் மொழிபெயர்த்துத் தொகுத்து வைத்திருந்த பழைய ஏற்பாட்டின் 46 புத்தகங்களை மாறுபாடின்றிக் கொள்வது நூல் தொகுதியின் மாறுபாட்டுக்குக் காரணமாகிறது.

திருவிவிலியம் மனிதன் மீது இறைவன் அன்பு கொண்டு, அவனைத் தன் சாயலாகப் படைத்து, அவன் நெறிகெட்டுப் பாவத்தில் வீழ்ந்த போதும், வாழ்வில் சரிந்த போதும், எப்படி இரக்கமுடன் தலையிட்டு விடுதலை வழங்குகிறார் என்பதைச் சித்திரிக்கும் வரலாற்று நூலாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. ஏனெனில், இதில் கி.மு. 1200முதல் கி.பி.200 முன் உள்ள 14 நூற்றாண்டுகளின் வரலாறும் சொல்லப்பட்டுள்ளது. தற்கால வரலாற்று ஆசிரியர்கள் இதில் சுட்டப்பட்ட கால, தேச அடையாளங்களை இனங்கண்டு மேற்கோள் காட்டுமளவுக்கு இது ஓர் ஆதார வரலாற்று நூல் எனவும் கருதலாம்.

### நம்பிக்கையின் இலக்கியம்

திருவிவிலியம் "நம்மைப் படைத்த இறைவன், தாம் நம்பிக்கையுடன் அவரது நெறிமுறைகளைக் கடைபிடித்து, நாம் கூப்பிடும் பொழுதெல்லாம் நமக்கு வந்து உதவுவார்" எனும் நம்பிக்கையின் இலக்கியமாகவும் திகழ்கிறது. ஏனெனில், அன்று இஸ்ரயேலருடன் "பேசிய" இறைவன் கூறிய அருள்மொழிகளே இன்றைய வாழ்க்கைச் சூழலில் நாம் படிக்கும் போது இறைவன் "பேசுகின்ற" சொல்ஆகி நம்பிக்கையை மேலும் வளர்த்து அவரது அளப்பரிய அன்பை வெளிப்படுத்துகின்றன. இதனாலேயே இறைவனின் அருள்மொழிகள் அடங்கிய மறைநூலாக இது போற்றப் பெறுகிறது. "ஆண்டவர் கூறிய வார்த்தைகள் இவையே" என இறைவனின் மூச்சுக் காற்றாகிய அன்பெனும் "தூய ஆவியைப்" பெற்று இது எழுதப் பெற்றது என நம்புவதால் "விடுதலை" அல்லது வீடுபேறு மறைநூல் வழியாகவே கிடைக்கிறது என்பதை "SOLA SCRIPTURA (Salvation Through Scriptures" என மறுப்பியக்கக் கிறிஸ்துவர்களும், "SOLA FIDE - Salvation Through Faith" என உரோமக் கத்தோலிக்கக் கிறிஸ்துவர்களும் நம்புவதாலேயே இது நம்பிக்கையின் இலக்கியம் ஆகிறது.

### விவிலியத்தின் மைய இழை 'அன்பு'

பிழை செய்த மனிதர் மீது இறைவன் அன்பு கொண்டு கடைப்பிடிக்க வேண்டிய கட்டளைகளையும், திருச்சட்டங்களையும் வழங்கியதோடு, மனிதர் வாழ வேண்டிய வழியைக் கற்பிக்கும் ஒரு பெரு அறநூலாகவும் திருவிவிலியம்

திகழ்கிறது. சட்டப் புத்தகமாகப் பாகுபடுத்திப் பார்க்கும்போது "செயச் சொல்லும் சட்டம்" (Apodictic Laws) என்றும் செய்வழி காட்டும் சட்டம் (Casinstic Laws) என்றும் இவை இரண்டுமே விரிவாக விவிலியத்தில் உரைக்கப்பட்டுள்ளன. செயச் சொல்லும் சட்டம் அல்லது தவறாமல் கடைப்பிடிக்க வேண்டிய சட்டங்கட்கு இறைவன் அளித்த "ஈரைந்து நியமங்கள்" ஆகிய பத்துக் கட்டளைகள் சான்றாகும்.

விவிலியத்தின் முதல் நூலாகிய "தொடக்க நூல்" தொடங்கி இறுதி நூலாகிய "இயேசு அருளிய திருவெளிப்பாடு" வரை இந்நூலை ஒருங்கிணைக்கும் மைய இழை யாதெனின் "அன்பு" ஆகும். மனிதர் மீது கொண்ட அன்பினால் அவன் எத்தகையோன் ஆயினும் அறங்களை, கட்டளைகளை "நம்பி"க் கடைப்பிடித்து ஒழுகினால் விடுதலை நிச்சயம் என்பதைத் திருச்சட்டம் பற்றிக் கூறும் "விடுதலைப் பயணம்" "லேவியர்", "இணைச் சட்டம்", "நீதி மொழிகள்", யோபு, சபை உரையாளர், ஞான நூல்கள் மற்றும் புதிய ஏற்பாட்டின் 27 புத்தகங்களும் எடுத்தியம்புகின்றன.

திருச்சட்டங்களும் அறங்களும் விரிவாக வலியுறுத்திக் கூறப்படுவதால், முதலில் திருச்சட்டம் என்றால் என்ன என்பதை அடுத்து வரும் பக்கங்களில் காண்போம்.

# 3. திருச்சட்டம்

*பரிந்து ஓம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்துஓம்பித்*
*தேரினும் அஃதே துணை (திருக்குறள் 141)*

## அடிப்படைச் சட்டம்

தனி மனித ஒழுக்கம் குலைவது அதாவது தன்னிலை மறந்து மனிதன் வழுக்கி விழும் நிகழ்வு அடிப்படைச் சட்டம் ஆகிய உள்மனது அல்லது மனசாட்சிக்கு எதிராக அவன் செயல்படும்போதுதான் நிகழ்கிறது. இந்த உள்மனம் கூறும் அடிப்படைச் சட்டம், இது நல்லது, இது கெட்டது, இது தீயது, இது பயனுள்ளது, இது இன்னாதது, இது இனியது என்று சீர்தூக்கிப் பார்த்து அவனைச் செயல்பட வைப்பது ஆகும். இவ்வாறு சீலம் குறைந்து சமுதாயம் சீர்கெட்டுப் போகும் போதெல்லாம் இறைவனாலும், அவரது தூதர்களாலும், சீடர்களாலும் அறநெறிகள் போதிக்கப்பட்டுள்ளன. இத்தகைய அறநெறிகள் அடிப்படைச் சட்டங்களை ஆதாரமாகக்கொண்டு அமைந்துள்ளன.

> நாட்டில் உண்மையும் இல்லை. இரக்கமும் இல்லை. கடவுளை அறியும் அறிவும் இல்லை. பொய்யாணை, பொய்யுரை, கொலை, களவு, விபச்சாரம் ஆகியன பெருகி விட்டன. எல்லாக் கட்டுப்பாடுகளையும் தகர்த்தெறிகின்றனர்; இரத்தப் பழிமேல் இரத்தப் பழி குவிகின்றது (ஓசேயா 4:1-3)

என்றும்

> ஞானம் நிறைந்தவன் எவனோ அவன் இவற்றை உணர்ந்து கொள்ளட்டும் ; பகுத்தறிவு உள்ளவன் எவனோ அவன் இவற்றை அறிந்து

> கொள்ளட்டும். ஆண்டவனின் நெறிகள் நேர்மையானவை; நேர்மையானவர்கள் அவற்றைப் பின்பற்றி நடக்கிறார்கள். மீறுகிறவர்கள் அவற்றில் இடறி விழுகின்றவர்கள் (ஓசேயா. 14 : 9)

என்றும் நெறி பிறழ்ந்து வாழ்வோர் எச்சரிக்கப்படுகின்றனர்.

**ஒழுக்கமும் சட்டமும்**

நாமாகவே முன்வந்து காக்கப்படவேண்டியது ஒழுக்கம். ஒழுக்கத்தைச் சீலம், நெறி, வழிமுறை எனப் பல பெயர் சொல்லிக் குறிப்பிடுகிறோம். இவ்வாறு உயிரினும் மேலானதாகக் கருதப்படும் "ஒழுக்கம்" ஆங்கிலத்தில் "Regulation" என்றும், செம்மொழி இலத்தீனில் "Regula" என்றும், இஸ்பானிய மொழியில் "Regla" என்றும் கூறப்படுகிறது. செம்மொழி இலத்தீனின் "Regula" என்ற சொல்லுக்குப் பொருளாக அ) அளக்கும்கோல் ஆ) ஒரு வகை இ) உதாரணம் ஈ) பின்பற்ற வேண்டியது உ) ஒரு நியதி அல்லது சட்டம் எனப் பல்வகைப் பொருள்களை அகராதி சுட்டிக் காட்டுகிறது. இவ்வாறு உலகச் செம்மொழிகள் அனைத்தும் கூறும் ஒழுக்கம் அல்லது சீலம் அல்லது நியமம் அல்லது கட்டளை அல்லது சட்டம் மனிதன் தோன்றிய காலமுதலே அவனுக்கு வழங்கப்பட்டு அவனால் கடைப்பிடிக்கப்பட்டும் வருகிறது.

**உயரிய சட்டம்**

சாதாரணமாக, ஆறறிவு படைத்த மனிதன் கொள்ள வேண்டிய உயரிய நோக்கு யாதெனின், பழைய பழக்க வழக்கங்களை மாற்றித், தன்னில் உள்ள தீமையை வென்று, நல்லதை அதற்கு உரிய இடத்தில் மீளவும் நிலை நாட்டுவதே ஆகும். இந்த மாற்றத்திற்கான பாதையை நாம் "உள்மனப் போராட்டம்" என எளிதான வார்த்தைகளால் கூறிவிடலாம். இத்தகைய போராட்டத்தைக் கிறிஸ்துவமும் இசுலாம் சமயங்களும் கடவுளுக்கும் அலகைக்கும் இடையேயான சண்டை என்றும், சௌராஸ்திரியர்கள் அஹுர்மசதுக்கும் ஆரிமானுக்கும் நடைபெறும் போராட்டம் என்றும், இந்து தருமம் பேணுவோர் - இது நன்மைக்கும் தீமைக்கும் இடையே

நடக்கும் போர் என்றும் பகர்வர். ஆனால் எமர்சன் என்ற அறிஞரோ,

> ஓ, என் உடன்பிறப்புக்களே, கடவுள் இருக்கிறார். இயற்கைக்கு நடுவே ஓர் ஆன்மா உள்ளது; ஒவ்வொரு மனிதரின் உள்ளத்தையும் அது கட்டுப்படுத்தும் என்பதால் இப்பிரபஞ்சத்திற்கு நாம் தீங்கிழைக்க முடியாது.

என ''உயரிய சட்டம்'' எது என்ற கேள்விக்குப் பதில் அளிக்கும்போது கூறுகிறார்.

"அரிசன பந்து" என்ற இதழில் 14-4-1946இல் மகாத்மா காந்தி அடிகள் "கடவுளே சட்டம், மற்றும் சட்டம் அவரே அளிப்பவர்" என எழுதியதற்கு ஒரு வாசகர்,

> 'சட்டங்கள் மனிதனால் செய்யப்பட்டுக் காலத்தால் மாறிக்கொண்டே இருப்பவை. திரௌபதிக்கு 5 கணவர்கள் இருந்தும் அவள் ''சதி''யாகக் கருதப்பட்டாள். இதையே இக்காலத்தில் ஒரு பெண் செய்தால் அவளை "அறங்கெட்டவள்" எனக் கூற மாட்டோமா

எனக் கேட்டிருந்தார். இந்தக் கேள்விக்குப் பதிலாகக் காந்தியடிகள்,

> சட்டம் இங்குக் கடவுளின் சட்டம் என்றே பொருள் கொள்ளப்படவேண்டும். மனிதர் அதனைத் தம் புரிந்துணர்வுக் கேற்பத் திரித்துக் கூறுகின்றனர். உதாரணமாக, பூமி சுழல்வது இயற்கையின் சட்டம். இதன் சரித்தன்மையை நாம் ஏற்றுக் கொள்கிறோம். ஆயினும் கலிலியோவுக்கு முன்னர் விண்வெளி ஆய்வு செய்தோர் வேறு பலவிதமாக நம்பினர். மகாபாரதம் ஓர் உவமானம் மட்டுமே ; வரலாறு அல்ல என்பது கருத்து. திரொளபதி என்பதன்

> பொருள் ஆன்மா ஐம்புலன்களுடன் மணம் செய்து கொண்டதையே குறிக்கும்'[1]

என மொழிந்துள்ளார்.

**சட்டமும் உரிமையும்**

எனவே, இதுசரி, இது தவறு எனக் கூறும் உள்மனதே அடிப்படைச் சட்டமாக மனிதர்க்கு இளமை முதலே கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கலாற்றை வகுக்கிறது. இதனால்தான் நாம் வாழும் இந்தக் காலத்தை "கணக்குக்கொடுக்கும் காலம்" என அடிக்கடி கூறுவர். "அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்" என்பதெல்லாம் மாறிப்போய், உண்மையைத் தேடி அலையும் மனிதர் கணக்குக் கொடுப்பதில் முதிர்ச்சி அடைந்து உள்ளனர். இதனால் சட்டத்திற்கும் உரிமைக்கும் உள்ள வேறுபாட்டை நன்கு அறிந்து நாம் செயல்பட வைப்பதே இந்த முதிர்ச்சி ஆகும். இந்த வளர்ச்சியையே தாமஸ் ஜெப்பர்சன் தமது "உரிமைகள் சட்டம்" என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

> நாம் சில உண்மைகள் தானாகவே வெளிப்படையாக உள்ளவை என்கிறோம். ஆயினும், மக்கள் உண்மையைக் காண விழையாவிடின், அதனைப் புரிந்து கொள்ளவும் முடியாது. அது காட்டும் சாட்சியமும் கண்ணுக்குத் தெரியாது. அண்மையில், தீமையை நியாயப்படுத்துபவர்களே முதலில் உரிமையை மறுப்பவர்கள் ஆவர்

எனக் கூறுகிறார்.

நன்மை, தீமையை உணர்ந்து செயலாற்றுவதே அடிப்படைச்சட்டம், மனச்சான்றின்படி நடப்பதே திருச்சட்டம் என்பதை,

> திருச்சட்டம் கற்பிக்கும் ஒழுக்கநெறி தங்கள் உள்ளத்தில் எழுதப்பட்டிருக்கிறது என்பதை

---

p.28, In Search of the Supreme, by M.K.Gandhi, Navajivan Trust, Ahmedabad, 1961.

*அவர்கள் தங்கள் நடத்தையில் காட்டுகிறார்கள். அவர்களது மனச்சான்றே இதற்குச் சாட்சி. ஏனெனில் அவர்கள் செய்வது குற்றமா? குற்றமில்லையா? என அவரவர் எண்ணங்களே வெளிப்படுத்துகின்றன (உரோமையர் 2:15)*

என்றும்

*ஏனெனில், திருச்சட்டத்தைக் கேட்பதால் மட்டும் யாரும் கடவுளுக்கு ஏற்புடையவர் ஆவதில்லை. அதனைக் கடைப்பிடிப்பவர்களே அவருக்கு ஏற்புடையவர்கள் ஆவார்கள். (உரோமையர் 2:13)*

என்றும் திருவிவிலியம் உரைக்கிறது. இவ்வாறு அடிப்படைச் சட்டமே, கடவுள் மனிதர்க்கு அளித்த மனச்சான்று எனக் கொண்டாலும் அதன் பரிணாம வளர்ச்சியில் புனிதமடைந்து அடிப்படைச் சட்டம் "திருச்சட்டம்" என ஏன் வழங்கப்படுகிறது என ஆய்வோம்.

### சட்டத்திற்குக் கீழ்ப்படிதலின் பயன்

கடவுளே சட்டம், சட்டத்தை அளிப்பவர் அவரே; அனைத்தும் இறைவனிடமிருந்தே வருகின்றன என நாம் நம்புவோமானால் நாம் கவலைப்படுவதற்குக் காரணம் ஏதும் இருக்காது. நாம் எதைச் செய்தாலும் இறைவனைச் சாட்சியாகக் கொண்டு செய்ய வேண்டும் என்ற ஒரே ஒரு நிபந்தனை மட்டுமே உள்ளது. இவ்வுலகைப்படைத்துக், காத்து அதனை நடத்துபவர் இறைவனே எனும்போது நாம் நமது செயல்களின் விளைவையே அறுக்கிறோம். எனவே, நாம் அவரது சட்டத்திற்குப் பணிந்து நடந்து, விளைவுகளால் பாதிப்படையாமல் இருக்க வேண்டும்.

*என்னை வணங்குபவரை, சரியான பாதையில் நடத்தி அவர்களது தேவையை வழங்குவேன்*

எனப் பகவத் கீதையில் மொழியப்பட்டுள்ளது.

*என் மீது அன்பு கூர்ந்து என் விதிமுறைகளைக் கடைப்பிடிப்போர்க்கு ஆயிரம் தலைமுறைக்கும் பேரன்பு காட்டுவேன் (விடுதலைப் பயணம் 20:6)*

எனத் திருவிவிலியத்தில் இறைவன் கூறுகின்றார். இதிலிருந்து சட்டம் முதன் முதலில் இறைவனால் மனிதர்க்கு வழங்கப்பட்டது என்பதாலேயே மறைநூல்கள் கூறும் சட்டத்தைத் திருச்சட்டம் என அழைக்கிறோம்.

"இறைவனே சட்டம் அளிப்பவர், அவரே சட்டம் ; அவரே அதை நிறைவேற்றுபவர்". எந்த ஒரு மனிதரும் இந்தச் சட்டம் செய்திடும் சக்தியை முழுமையாகக் கைக்கொள்ள இயலாது. அப்படி கொள்ள முயற்சித்தால் அவர் கலப்படமற்ற கொடுங்கோலன் என்றே பிறர் பார்வையில் இருப்பார். எவரை வணங்கி, நாம் வாழ்கிறோமோ அவராகவே நாம் ஆவோம் என்பதே நியதியும் உண்மையும் மற்றும் ஆழ்ந்த வெளிப்பாடும் ஆகும்.

எனவேதான் இறைவனும், திருச்சட்டமும் ஒன்றே. திருச்சட்டமே கடவுள். அவரே உண்மை, அன்பு, சட்டம், ஞானம், ஒளி, கருணை, அழகு என மனிதர்க்குத் தெரிந்த அனைத்துப் பொருள்களாலும் அழைக்கப்பட வல்லவர். ஏனெனில் அனைத்திலும் அனைத்துமாய் விளங்குபவர் அவரே.

### தெய்வீகச் சட்டம்

இத்தகைய தெய்வீகச் சட்டம் எது, அது சட்டம் எனக் கூறப்படாமல் கட்டளை என ஏன் அழைக்கப்படுகிறது என ஆய்வோம். சட்டத்தை மீறினால் தண்டனை உண்டு. ஆனால் கட்டளை என்பது மறு பேச்சின்றிக் கடைப்பிடிக்க வேண்டியது. படைகளின் தலைவர் தமது படை வீரர்கட்கு வழங்குவது கட்டளை. அரசன் தன் குடிகட்கு வழங்குவது கட்டளை. அந்த விதத்தில், படைகளின் ஆண்டவர், மன்னர்க்கெல்லாம் மாமன்னர் அளிப்பது கட்டளை என்றே அழைக்கப்படுகிறது. ஏனெனில் படையைக் காப்பதும் குடியைக் காப்பதும் தலைவர் கடமை என்பதால், அந்தக் கடமையை அன்பு மேலீட்டால் செய்யும் கடவுள் அளித்ததைக் கட்டளை என அவரே குறிப்பிட்டுள்ளார்.

திருவிவிலியத்தில் விடுதலைப் பயண நூலில் செங்கடலைக் கடந்து எகிப்திலிருந்து மோசே இஸ்ரயேலரை மீட்டு வந்தபோது, பாலை நிலத்தில் கசப்பான நீரைச் சுவையான நீராக மாற்றி,

சட்டங்களையும் ஒழுங்குகளையும் வழங்கி ஆண்டவர் அவர்களைச் சோதித்தார் எனக் காண்கிறோம். மேலும் அவர் உன் கடவுளாகிய ஆண்டவரின் குரலுக்கு நீ அக்கறையுடன் செவி சாய்த்து, அவர் பார்வையில் நலமாகத் தோன்றுவதைச் செய்து, அவர் கட்டளைகளைப் பின்பற்றி, அவர் சட்டங்கள் அனைத்தையும் கைக்கொண்டால், நான் எகிப்திற்கு வரச் செய்து கொள்ளை நோய்களை உன்மேல் வரவிட மாட்டேன். ஏனெனில் நானே உன்னைக் குணமாக்கும் ஆண்டவர் (வி.ப.15 : 26)

என்றார்.

## கடவுள் தந்த கட்டளைகள்

பாலைவனத்தில் சீனாய் மலையருகில் இஸ்ரயேலர் சென்றடைந்தனர். அவர்கட்கு உண்பதற்கு உணவும், நீரும் இறைவனால் வழங்கப்பட்டன.

மூன்றாம் நாள் பொழுது புலரும் நேரத்தில் பேரிடி முழங்கியது. மின்னல் வெட்டியது. மலைமேல் மாபெரும் கார்மேகம் வந்து கவிழ்ந்தது. எக்காளப் பேரொலி எங்கும் எழுந்தது. இதனால் பாளையத்திலிருந்த அனைவரும் நடுநடுங்கினர் (வி.ப.19:16)

எக்காள முழக்கம் எழும்பி வரவர மிகுதியாயிற்று. மோசே பேசியபோது கடவுளும் இடி முழக்கத்தில் விடை அளித்தார். ஆண்டவர் சீனாய் மலையுச்சியில் இறங்கி வந்தார். அப்போது ஆண்டவர் மோசேயை மலையுச்சிக்கு அழைக்க மோசே மேலே ஏறிச் சென்றார். (வி.ப. 19: 19-20).

## கடவுள் அருளிய வார்த்தைகள் இவையே

1. நானே உன் கடவுளாகிய ஆண்டவர் : அடிமை வீடாகிய எகிப்து நாட்டினின்று உன்னை வெளியேறச் செய்தவர்.

என்னைத் தவிர வேறு தெய்வங்கள் உனக்கிருத்தல் ஆகாது. (வி.ப.20: 1-3)

2. உன் கடவுளாகிய ஆண்டவரின் பெயரை வீணாகப் பயன்படுத்தாதே. ஏனெனில் தம் பெயரை வீணாகப் பயன்படுத்துபவரை ஆண்டவர் தண்டியாது விடார். (வி.ப.20:7)

3. ஓய்வு நாளைத் தூயதாகக் கடைப்பிடிப்பதில் கருத்தாயிரு. (வி.ப. 20.8)

4. உன் கடவுளாகிய ஆண்டவர் உனக்களிக்கும் நாட்டில் உன் வாழ்நாள்கள் நீடிக்கும்படி உன் தந்தையையும் தாயையும் மதித்து நட. (வி.ப. 20:12)

5. கொலை செய்யாதே. (வி.ப. 20:13)

6. விபச்சாரம் செய்யாதே. (வி.ப. 20:14)

7. களவு செய்யாதே. (வி.ப. 20:15)

8. பிறருக்கு எதிராகப் பொய்ச் சான்று சொல்லாதே. (வி.ப20:16)

9. பிறர் வீட்டைக் கவர்ந்திட விரும்பாதே.

10. பிறர் மனைவி, அடிமை அடிமைப்பெண், மாடு, கழுதை, அல்லது பிறர்க்குரியது எதையும் கவர்ந்திட விரும்பாதே. (வி.ப20:17)

மேற்காணும் பத்துக் கட்டளைகளைத் தொடர்ந்து, அடிமைகளைப் பேண வேண்டிய நீதிச்சட்டங்களும், வன்முறைச் செயல்களில் ஈடுபட்டால் வரும் தண்டனைகளும், உரிமையாளரின் கடமைகளும், பிறர்பொருள் களவாடியதற்கு ஈடுசெய்வது பற்றியும், காமத்தை அடக்கிக் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளும், நீதியைக் கடைப்பிடித்து இரக்கம் காட்டி வாழ வேண்டிய முறைகளும் சட்டங்களாக இறைவனால் அளிக்கப்பட்டுள்ளன.

இவற்றைத் தொடர்ந்து, கடவுளின் தூய தன்மையும், அவரை வழிபடுவதற்கான முறைகளும், பாவக் கழுவாய்ப் பரிகாரங்களும், குருக்களுக்கான ஒழுங்கு முறை, உண்பதில்

ஒழுக்கம், பேறுகாலப் பெண்கள்தூய்மை, உடல் தூய்மை, பாலியற் குற்றங்களும் தண்டனையும், தூய்மை நீதி பற்றிய சட்டங்களும் வழங்கப்பட்டுள்ளன.

நீதி பற்றிய சட்டத்தில் அன்புக் கட்டளை எனப் பின்னாளில் இயேசுவால் "புதிய கட்டளை" என வலியுறுத்தப்பட்ட,

> பழிக்குப் பழியென உன் இனத்தார் மேல் காழ்ப்புக் கொள்ளாதே. உன் மீது நீ அன்பு கூர்வது போல் உனக்கு அடுத்திருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக! நான் ஆண்டவர் (லேவி : 19:18)

என்ற அன்புக் கட்டளையும் அப்போதே வழங்கப்பட்டு உள்ளதால், திருச்சட்டம் முழுவதும் அன்பு கொண்டு இறைவன் மனிதர்க்கு வழங்கிய ஒன்று என அறியலாம்.

### திருச்சட்டத்தின் மேன்மை

இவ்வாறு வழங்கப்பட்ட திருச்சட்டம் புனிதமானது, உன்னதமானது, மேன்மையானது என்பதாலேயே அதனைக் கடைப்பிடிப்போர் பேறு பெற்றோர் எனப் போற்றப்படுவர். பேறு பெற்றோரிலும் நற்பேறு பெற்றோர் யார் எனின்

> ஆண்டவரின் திருச்சட்டத்தில் மகிழ்ச்சியுறுபவர்; அவரது சட்டத்தைப் பற்றி இரவும் பகலும் மதிப்பவர் (திருப்பா. 1:2)

எனக் கூறுவதோடு ஆண்டவரின் திருச்சட்டம் முழுமையாய்க் கடைப்பிடிக்க வேண்டிய ஒன்று. அதை விட்டு விலகக் கூடாது. அவ்வாறு கடைப்பிடித்தால் அவரது ஒழுங்கு முறைகள் இன்பம் தரும் என்பதால் இறைவன் திருவாய் மலர்ந்தருளிய, சட்டம் பொன் வெள்ளிக் காசுகளை விட மேலானது எனத்திருப்பா எண் 119இல் 1 முதல் 168 முடிய மிக நீண்ட திருப்பாவாக அமைந்து இதன் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துகிறது.

### திருச்சட்டப்படி ஒழுகல்

திருச்சட்டம் புனிதராக வாழும் மகான்களுக்கு அல்லாமல் நம்மைப்போன்ற சாதாரண மனிதர்கட்காக

வழங்கப்பட்டது என்பதால் கடைப்பிடிக்க எளிமையானதே என்பதை,

> திருச்சட்டம் நல்லது என்பதை அறிந்திருக்கிறோம். ஆனால் அதை முறைப்படி பயன்படுத்த வேண்டும். திருச்சட்டம் நேர்மையானவர்களுக்காக இயற்றப்படவில்லை. மாறாக ஒழுங்கு மீறுவோர், கட்டுப்பாட்டுக்கு அடங்காதோர், இறைப்பற்று இல்லாதோர், பாவிகள், தூய்மையற்றோர், உலகப் போக்கைப் பின்பற்றுவோர், தந்தையைக் கொல்வோர், பிற மனிதரைக் கொல்வோர், பரத்தைமையில் ஈடுபடுவோர், ஒரு பால் புணர்ச்சி கொள்வோர், ஆண்களைக் கடத்தி விற்போர், பொய்யர், பொய்யாணையிடுவோர் மற்றும் நலம் தரும் போதனையை எதிர்ப்போர் ஆகியோர்க்காகவே திருச்சட்டம் இயற்றப்பட்டது. இந்நலந் தரும் போதனையே பேரின்பக் கடவுள் என்னிடம் ஒப்புவித்திருக்கிற அவரது சீர்மிகு நற்செய்தி (1 திருமா. 8-11)

எனப் புனித பவுல் திருமாத்தேயுக்கு எழுதிய முதல் திருமுகத்தில் பட்டியலிட்டுக் கூறுகிறார்.

> இவ்வாறு இறைவன் அருளிய திருச்சட்டம் மனிதர் அனைவர்க்கும் உள்ளத்தில் எழுதப்பட்டு அவர்களது மனச்சான்றே அதற்குச் சாட்சி என்பதால் தாம் செய்வது குற்றமா, குற்றமில்லையா என்பதை அவரவர் எண்ணங்களே வெளிப்படுத்துகின்றன. இந்தத் திருச்சட்டங்களைக் கடைப்பிடித்து ஒழுக எளிமையான ஒழுகலாறு எதுவெனில், நீங்கள் யாருக்கும் எதிலும் கடன்படாதீர்கள். ஒருவர்க்கொருவர் அன்பு செலுத்துவதே நீங்கள் செலுத்த வேண்டிய ஒரே கடனாய் இருக்கட்டும். பிறரிடத்தில் அன்பு கூர்பவர் திருச்சட்டத்தை நிறைவேற்றுபவர் ஆவார். ஏனெனில்,

விபச்சாரம் செய்யாதே
கொலை செய்யாதே
களவு செய்யாதே
பிறர்க்குரியதைக் கவர்ந்திட விரும்பாதே

என்னும் கட்டளைகளும் பிற கட்டளைகளும்

உன்மீது அன்பு கூர்வது போல் உனக்கு அடுத்தவர் மீதும் அன்பு கூர்வாயாக என்னும் கட்டளையில் அடங்கியுள்ளன. அன்பு அடுத்திருப்பவருக்குத் தீங்கிழைக்காது. ஆகவே அன்பே திருச்சட்டத்தின் நிறைவு. (உரோ: 13 8–10)

எனப் புனித பவுல் இரத்தினச் சுருக்கமாகக் கூறுகிறார்.

மேற்காணும் திருச்சட்டத்தின் ஒளியில் அறநூல்கள் வலியுறுத்தும் ஒழுகலாறுகளை ஒப்பிட்டுத் தனித் தனித் தலைப்பு வாரியாகப் பின்வரும் அத்தியாயங்களில் ஆய்ந்திடலாம்.

# 4. அறன் வலியுறுத்தல்

நூறு சமயம் உளவா நுவலுங்கால்
ஆறு சமயம் அவ் ஆறுள் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறி நில்லா
ஈறு பரநெறி இல்லா நெறி அன்றே

*திருமந்திரம். 1537*

## அன்பு அறிவுசார் சமயங்கள்

நாம் வாழுகின்ற இவ்வுலகில், மனதைப் பக்குவப்படுத்தி நமக்கு "வீடு பேறு" ஒன்று உளது எனப் போதிக்கும் சமயங்கள் நூற்றுக்கு மேற்பட்டு உள்ளன. ஆயினும் இவற்றை அறிவுசார் சமயம், அன்புசார் சமயம் என்ற இரு பெரும் அடைப்புக்குள் பகுத்துக் கூறிவிட இயலும். உருவ வழிபாட்டை விலக்கியவை அறிவுசார் சமயம் எனில், உருவ வழிபாடு செய்து அன்பை மையமாகக் கெண்ட அன்புசார் சமயங்களே இன்று மக்கட் தொகையில் பெருகி, நின்று நிலவி வருவதைக் காண்கிறோம்.

இச் சமயங்கள் அனைத்துமே மனித நேயத்தைப் பேணிட, தீயவை செய்தலுக்கு நாணிட, நம்மை அழைத்து, வழிகாட்டி, தமக்கே உரிய அறநெறிப் போதனைகள் மூலம் குன்றா ஒழுக்கச் சீலராய் மனிதர் வாழ்ந்திட வழி வகுக்கின்றன. அறநெறிப் போதனைகளும் ஆயிரக் கணக்கில் இருப்பதால், அவற்றைச் சிறந்தது, உகந்தது, நிறைவானது என வடித்தெடுத்துப் பார்க்கும் அவசியம் எழுகிறது.

## அறஞ்செய்திட விரும்பு

ஆத்திசூடி பயிற்றும் "அறம் செய விரும்பு" முதலாக உலகின் அனைத்துச் சமயங்களும் அறத்தை வலியுறுத்துகின்றன என்பது உண்மை.

> மக்கள் பார்க்க வேண்டுமென்று அவர்கள் முன் உங்கள் அறச்செயல்களைச் செய்யாதீர்கள். இதைக் குறித்து நீங்கள் எச்சரிக்கையாய் இருங்கள். இல்லையென்றால் உங்கள் விண்ணகத் தந்தையிடமிருந்து உங்களுக்குக் கைம்மாறு கிடைக்காது" என இயேசு அறம் செய்வதும் வீண் பெருமைக்காகப் பிறர் மெச்சுவதற்காகச் செய்யக் கூடாது (மத. 6:1)

எனக் கூறுகிறார்.

> ஒவ்வொருவரும் தம் செயல்களை ஆய்ந்து பார்க்கட்டும். அப்பொழுது தம்மைப் பிறரோடு ஒப்பிட்டுப் பெருமை பாராட்டாமல், தாம் செய்த செயல்களைப் பற்றி மட்டும் பெருமை பாராட்ட முடியும் (கலா: 6:4)

எனப் புனித பவுல் கூறுவதோடு,

> நன்மை செய்வதில் மனந்தளராதிருப்போமாக! நாம் தளர்ச்சி அடையாமல் இருந்தால் தக்க காலத்தில் அறுவடை செய்வோம். (கலா. 6:9)

என்றும் அன்புப் பணியாக அறஞ்செயச் சொல்லி அதற்கான நெறிமுறைகளும் என்னென்ன என்று பட்டியலிட்டுக் கூறுகிறார். ஆயினும்

> **அன்றுஅறிவாம் என்னாது அறம்செய்க மற்றுஅது**
> **பொன்றுங்கால் பொன்றாத் துணை (குறள். 36)**

எனும் பொய்யா மொழித் தேவர் கூற்று, அறிவை ஒதுக்கி அறம் செய்தலே பொன்றாத் துணையெனத் துலக்குகிறது. இதையே, "இன்றே செய் நன்றே செய்" என வலியுறுத்தும் நாலடியார் பாடல்

> **இன்று கொல்? அன்று கொல்? என்று கொல்? என்னாது;**
> **பின்றையே நின்ற கூற்றம் என்று எண்ணி**
> **ஒருவுமின், தீயவை; ஒல்லும் வகையால்**
> **மருவுமின் மாண்டார் அறம் (4–6)**

என, 'ஓவாது நின்று உழற்றி வாழ்ந்திடினும்' வாழ்நாட்கள் விரைவில் கழிந்து விடும் என்பதால் அறஞ்செய வேண்டும் எனப் பறை சாற்றுகிறது.

### இடையறாது அறம் செய்க

இவ்வாறு செய்யும் அறத்தை இடையிலே நிறுத்தி விடாமல் இடையறாது செய்தல் வேண்டும் எனும் பழமொழிப் பாடல், ஒரு பயிரைப் பதமாக நட்டுவித்துக் காத்து விளைய வைத்து அறுத்துப் பயன் பெறாமல் போகின்றவரை விட அதனை நடாமலேயிருப்பது நல்லது என்பதை,

> **பட்ட வகையால் பலரும் வருந்தாமல்**
> **கட்டுடைத் தாகக் கருதிய நல்லறம்**
> **முட்டுடைத் தாகி இடை வீழ்ந்து ஒழிதலின்**
> **நட்டறான் ஆதலே நன்று** **(பழமொழி நானூறு:197)**

என அறம் செய்பவர், குறுக்கிடும் இடர்ப்பாடுகளைக் கருதி இடையிலேயே அதனை நிறுத்தி விடல் கூடாது என நுண்மையாகவும் சுருக்கமாகவும் ஒளியுடையதாகவும் ஒண்மையுங் கொண்டு ஒலிக்கிறது.

### அறம் நட்டல்

"அறனை நினைப்பானை அல்பொருள் அஞ்சும்" எனத் திரிகடுகம் உறுதி கூறினாலும், அறம் செய்பவன் நன்னெறியில் நினைத்து எப்படி நிற்க வேண்டும் எனக் கூற வந்த சிறுபஞ்ச மூலம்,

> **அறம் நட்டான் நல்-நெறிக்கண் நிற்க, அடங்காப்**
> **புறம் நட்டான் புல் நெறி போகாது! புறம் நட்டான்**
> **கண்டு எடுத்து கள், களவு, சூது, கருத்தினால்,**
> **பண்டு எடுத்துக் காட்டும் பயின்று**
>
> **(சிறுபஞ்ச மூலம்:26)**

எனப் பழமொழி பயன்படுத்திய "நட்டல்" என்ற பதத்தை ஆழ நட்டு நெஞ்சிற் பதிக்க வைக்கிறது.

இவ்வாறு அறவழி வாழ்பவர், விலக்கிக் கொள்ள வேண்டிய தீமைகள் என,

> ***பிறர்மனை, கள், களவு சூது, கொலையோடு***
> ***அறன் அறிந்தார், இவ்வைந்தும் நோக்கார் - திறன்***
> ***இலர் என்று***
> ***எள்ளப் படுவதூஉம் அன்றி, நிரயத்துச்***
> ***செல்வழி உய்த்திடுத லான் (ஆசாரக்கோவை 37)***

என்கிறது. நரகத்திற்குச் செல்லாமல் காக்கப்படுவர் என மேற்கண்ட சிறுபஞ்சமூலப் பாடலின் தாக்கத்துடன் தூக்கி ஒளி காட்டுகிறது ஆசாரக் கோவை.

### துணையோடு அறம் செய்க

தனிமனிதராக நின்று தாம் மட்டும் உய்யும் வழியை எண்ணாது அன்பினாற் கட்டுண்ட அறவோர், அறத்தைத் தம் துணைவியாரோடு சேர்ந்து செய வேண்டும் என்பதை

> ***ஆற்றும் துணையால் அறம் செய்கை முன் இனிதே***
> ***(இனியவை நாற்பது-6)***

என்று கூறுவதோடு

> ***அறம் புரிந்து அல்லவை நீக்கல் இனிதே***
> ***(இனியவை நூற்.21)***

என அல்லவை தேய்த்து, அறத்தைப் பெருக்க வேண்டும் எனப் பெருங்குரலெடுத்துப் பேசுகிறது.

### அறமும் திறமும்

தமிழிலக்கியங்களும், சமய சாத்திரங்களும் மனிதன், மனிதனாக வாழ வேண்டுமென்பதை வலியுறுத்தி, அடிப்படைத் தேவைகள் பெற்று, அறங்காத்துத் திறம்பட வாழ்தலே வாழ்க்கை என்று எடுத்தியம்புகின்றன. இதையே,

> அறமெனப் படுவ தியாதெனக் கேட்பின்
> மறவா திதுகேள் மன்னுயிர்க்கெல்லாம்
> உண்டியு முடையு முறையுளு மல்லது
> கண்ட தில்லெனக் காவல னுரைக்கும்
> (மணிமேகலை 25: 228-31)

எனக் காப்பியங்களுள் ஒன்றாகிய மணிமேகலையும் முரசு கொட்டுகிறது. மன்னுயிர்க்கெல்லாம் அடிப்படைத் தேவைகளை வலியுறுத்தும் அன்பு பற்றிப் பின்பு வரும் பக்கங்களில் காண்போம்.

# 5. அன்புடைமை

*அன்பின் உள்ளான் புறத்தான் உடலாய் உள்ளான்*
*முன்பின் உள்ளான் முனிவர்க்கும் பிரான் அவன்*
*அன்பின் உள்ஆகி அமரும் அரும் பொருள்*
*அன்பின் உள்ளார்க்கே அணை துணை ஆமே*
*(திருமந்திரம். 279)*

## அன்பே கடவுள்

வாழ்வின் அந்தி வேளையின்போது, நாம் எப்படி 'அன்பு செய்தோம்' என்பதைப் பொறுத்தே நமக்குத் தீர்ப்பு கிடைக்கும்' எனப் புனித சிலுவை அருளப்பர் கூறுகிறார். "அன்பே கடவுள், கடவுளே அன்பு" என்ற உண்மையை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். கடவுள் அளித்த முதற் கட்டளை:

> உன் முழு இதயத்தோடும் உன் முழு உள்ளத்தோடும், உன் முழு ஆற்றலோடும் உன் கடவுளாகிய ஆண்டவரிடம் அன்பு கூர்வாயாக"
> *(இணைச் சட்டம் 6:5)*

எனத் திருவிவிலியத்தில் அருளப்பட்டுள்ளது. கண்ணால் காண இயலாத ஆண்டவரை நாம் எப்படி அன்பு செய்ய முடியும் என்ற கேள்விக்குப் பதிலாக அனைத்து மனிதரும் அவரது சாயலில் படைக்கப்பட்டவர்கள் என்பதால்,

> உன்மீது நீ அன்பு கூர்வது போல் உனக்கு
> அடுத்திருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக
> *(லேவியர் 19:18)*

என்ற பதிலும் கிடைக்கிறது.

## அன்பும் அருளும்

அன்பினால் அருளிச் செய்யப்பட்ட இத்தகைய போதனைகளை "அருள்" எனக் கொண்டோமானால் அன்பும்

அருளும் எவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புடையவை என முதலில் அறிய வேண்டும்

> "Grace" என்ற ஆங்கிலச் சொல், இலத்தீன் சொல்லாகிய "gratia" என்பது ஆகும். இதுவும் கிரேக்கரின் "Charis" என்பதிலிருந்தே வந்தது. இதற்குப் பொருளாக அன்பான கொடை, உதவி, சார்பிருத்தல், அழகு, நன்றி சொல்ல என்றெல்லாம் கூறுவர். சாதாரணமாக நாம் தெய்வாதீனமாகத் திடீரென்று பெறும் உதவிகள் மற்றும் எதிர்பாராத விதத்தில் நாம் சற்றும் தகுதி இல்லாதபோதும் பெறும் பலன்கள் நமக்கு மிகுந்த மனநிறைவைத் தருகின்றன. இதனையே அருள் என்கிறோம்.

திருவிவிலியத்தில், கடவுள் காட்டும் "கருணை" "அருள்" என்று முக்கிய எபிரேபியச் சொற்களால் குறிக்கப்படுகின்றன. "ஹென்" என்ற சொல் ஒருவர்க்கு இரக்கமும் கருணையும் கொண்டு உதவுவது; "ஹெசெத்", கலப்படமற்ற நன்மையை அன்புடன் கனிவுடன் செய்வது; மற்றும் "எமெத்" என்பது என்றென்றும் மாறாத அன்பு எனவும் சொல்லப்பட்டுள்ளது.

இந்தியப் பக்தி இலக்கியங்களிலும், அறநூல்களிலும் இதே இரக்கம், கனிவு, பாசம் கொண்ட இறைவனின் மாறாத அன்பினையே "அருள்", "அனுக்கிரகம்" "அனுகம்பம்", "பிரசாதம்" என்றெல்லாம் மொழிவர்.

## அன்பு–அகாப்பே

திருவிவிலியத்தின் புதிய ஏற்பாட்டில் "அன்பு"-ஆகாப்பே ("Agape") என்பது செம்மொழி கிரேக்கத்தில் பயன்படுத்தப் படவேயில்லை. ஏனெனில் பொதுவாக அன்பு என்பதற்குக் கிரேக்கத்தில் "Eros" - ஆசை, "Storage" - பாசம் மற்றும் Philia - நட்பு எனக் குறிப்பாக உணர்த்தப் பல்வகைச் சொற்கள் உள்ளன. இவ்வாறு விவிலியம் விளக்குவது ஒரு தனிவகையான அன்பு என்பதை,

> நீங்கள் ஒருவர் மற்றவர்க்குச் செலுத்தும் அன்பிலிருந்து நீங்கள் என் சீடர்கள் என்பதை எல்லோரும் அறிந்து கொள்வர். (யோவான் 13:35)

என இயேசுவே "அகாப்பே" எனப்படும் அன்பிற்கு விளக்கம் அளித்துள்ளார். இத்தகைய அன்பினை வள்ளுவப் பெருந்தகை

**அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்**
**'நண்பு'என்னும் நாடாச் சிறப்பு (திருக்குறள் 74)**

இவன் என்னை மதிக்காதவன், வேறு குலத்தவன், என் பகைவன் என்றெல்லாம் அன்பு செய்யத் தடை போட்டுக் கொண்டால் பயனில்லை. கலப்படமற்ற அன்பானது, பாகுபாடின்றி- உற்றார், உறவினர், பகைவர், அண்டை வீட்டார் ஆகிய அனைவர் மீதும் செலுத்தப்பட வேண்டிய ஒன்று என்பதை வலியுறுத்தி

**அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ்? ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும் (திருக்குறள் 71)**

எனவும் அன்புடைமை எனும் தலைப்பில் இதை முதற்பாடலாக அமைத்திருக்கிறார்.

உலகாயத நோக்கில், மதியுடன் வாழ்வதற்கு வழிகாட்டும் பழமொழியும், அன்பினால் மட்டும் ஒருவரது உள்ளத்தை உருக்கி அதன் பயனாக அவரிடமிருந்து தேவையான உதவியைப் பெறுதலே சிறந்தது ஆகும். அவ்வாறின்றி, அன்பின்றி வற்புறுத்துவது பசுவைக் கொன்று பால் கறப்பதற்கு ஒப்பாகும் என்பதை

**அன்பின் நெகிழ வழிபட்டுக் கொள்ளாது**
**நின்ற பொழுதின் முடிவித்துக் கொள்வதே**
**கன்று விட்டு ஆக்கறக்கும் போழ்தில் கறவானாய்**
**அம்புவிட்டு ஆக்கறக்கு மாறு (பழமொழி : 77)**

என அன்பு தாமாகச் சுரப்பது எனப் பழமொழி வாயிலாகப் பகரப்பட்டுள்ளது.

இவ்வாறு "அன்பின் வழியது உயிர்நிலை" என்பதை ஆசாரக் கோவை, அன்பு செய்து வாழ்தலை வலியுறுத்தி,

**துன்பத்துள் துன்புற்று வாழ்தலும், இன்பத்துள்**
**இன்ப வகையான் ஒழுகலும், அன்பின்**
**செறப்பட்டார் இல்லம் புகாமை – இம் மூன்றும்**
**திறப்பட்டார் கண்ணே உள (ஆசாரக்கோவை : 79)**

என அன்பில்லாதவர் இல்லம் புகாமை நன்று என்றும் அன்பின்மையைக் கூறுகிறது.

**கடவுளைக் காட்டும் கண்ணாடி**

குற்றமற்ற செயல்களைச் செய்வதும், தானே முன்வந்தும் எல்லோர்க்கும் அன்பு செய்வதே நல்லது என்பதை இனியவை நாற்பது,

> ***தங்கண் அமர்பு உடையார் தாம் வாழ்தல் முன் இனிதே;***
> ***அம்கண் விசும்பின் அகல் நிலாக் காண்பு இனிதே;***
> ***பங்கம் இல் செய்கையர் ஆகி; பரிந்து, யார்க்கும்***
> ***அன்புடையர் ஆதல் இனிது (இனியவைநாற்பது : 9)***

எனக் குற்றமற்ற செயல்களைச் செய்து அனைவரிடத்தும் அன்புடையவராய் மாறுவது இனிது என அன்பினை "அகாப்பே" எனக் கூறப்பட்டதை வழி மொழிகிறது.

அன்பு எனப்படுவது கடவுளின் சாயலாய் மனிதர் படைக்கப்பட்டதால் மனிதனைக் கடவுளாகக் காட்டும் ஒரு கண்ணாடி. இதனைப் பன்முகம் கொண்ட ஒரு பெருவைரக்கல் எனவும் கூறலாம். மனிதர்க்கு உணர்வுகள் வெளிச் சூழல்கள் மூலம் உள்ளுக்குள் வந்தடைகின்றன. ஆனால் அன்பு உள்ளிருந்து, மனிதரிடமிருந்து வெளிப்படுவது. இதனால்தான் அன்பு என்பதை "இரக்கம்" என மட்டும் கூற இயலாது. அன்பு என்பது அனைத்துச் சீலங்களிலும் முதன்மையானது. இந்த அன்புக்கு ஆதாரம் கடவுளே. இதனைத்தான் நாம் அடுத்தவர்க்கு அளிக்கிறோம்.

> *அவரே முதலில் தம்மிடம் அன்பு செலுத்தியதால்*
> *நாமும் அன்பு செலுத்துகிறோம் (1 யோவான் 4:19)*

என்கிறது விவிலியம்.

பெரும் பாவியாக வாழ்ந்து, பின்னர்ப் புனிதராக மாறிய அகஸ்டின் தமது சரிதையில் (Confessions)

> குழந்தையே! இதனை இதயத்தில் கொள்; நான் உன்னை ஏற்கெனவே கண்டு பிடிக்காதிருப்பின் நீ என்னைத் தேடியிருக்க மாட்டாய்

என இறைவன் அவளுக்குக் கூறியதாக எழுதியுள்ளார். அதனால்தான்

> **அன்போடு உருகி அகம் குழைவர்க்கு அன்றி**
> **என்போன் மணியினை எய்த ஒண்ணாதே**
>
> (திருமந்திரம் 272)

எனத் திருமந்திரம், அன்பினால் அகம் குழைபவர்க்கே இறைவனை அடைய இயலும் என அன்பின் பண்புப் பயனைப் பறைசாற்றுகிறது.

**அறமும் மறமும்**

இறைவனின் திருச்சட்டங்களைக் கடைப்பிடித்து ஒழுகுவதைக் காட்டிலும், இறைவனின் பிம்பமாக வாழும் பிற மனிதரிடம் அன்பு காட்டுவதே முக்கியமானதும், உன்னதமானதுமாகும்.

> உனக்கு அடுத்தவரிடம் அன்பு கூர்வாயாக
> பகைவரிடம் வெறுப்புக் கொள்வாயாக!
>
> எனக் கூறியிருப்பதைக் கேட்டிருக்கிறீர்கள். ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன் : உங்கள் பகைவரிடமும் அன்பு கூறுங்கள். உங்களைத் துன்புறுத்துவோருக்காக இறைவனிடம் வேண்டுங்கள். இப்படிச் செய்வதால் நீங்கள் உங்கள் விண்ணகத் தந்தையின் மக்கள் ஆவீர்கள். ஏனெனில் அவர் நல்லோர் மேலும் தீயோர் மேலும் தம் கதிரவனை உதித்தெழச் செய்கிறார். நேர்மையுள்ளோர் மேலும் நேர்மையற்றோர் மேலும் மழை பெய்யச் செய்கிறார்

என இயேசு இறைவனின் அன்புப் பார்வையில் அனைவரும் அவரது பிள்ளைகளே எனச் சொல்லுகிறார். (மத்தேயு 6:43-45)

இவ்வாறு பகைவரிடம் அன்பு செய்வதற்குத் தனி மனத்தெளிவு, பகைவர் கொடுக்கும் தொல்லையைத் தாங்கிக் கொள்ளும் உறுதிமிக்க மனத்திடம் ஆகியவற்றை "வீரம்" எனக் கூறுவோமாயின் அத்தகைய வீரச் செயல்களைப் புரிவதற்கும் அன்பு தேவை என்பது விளங்கும். இதனையே வள்ளுவப் பெருமகனார்

**அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை (திருக்குறள் 85)**

என்றார்.

## அறிவதறிந்து அன்பு செய்தல்

இத்தகைய மனிதத்தெளிவுடன் பொறுமையுடனும் நாம் அன்பின் முழு உருவமாக மாறி அறிய வேண்டியதை அறிந்து, வாழ்ந்து, நம்மைச் சுற்றியுள்ள உலகிற்கு நன்மையே செய்து வருவோமாயின் நமக்குத் துன்பம் வராது என அறுதியிட்டுக் கூறுகிறது நாலடியார்.

**அறிவது அறிந்து, அடங்கி, அஞ்சுவது அஞ்சி**
**உறுவது உலகு உவப்பச் செய்து, பெறுவதனால்**
**இன்புற்று வாழும் இயல்புடையார், எஞ்ஞான்றும்**
**துன்புற்று வாழ்தல் அரிது (நாலடியார் 74)**

என்பது நாலடிப்பாடல்.

அறிவது அறிந்து எனச் சொல்லப்படுவது யாதெனின் அறநெறிக்கு அடிப்படையாக அமைவது அன்பு, இதனைப் பிற உயிர்களிடத்து அருளுடன் வாழ்தல் எனக் கூறுவோமாயின்,

**அற்றாக நோக்கி அறத்திற்கு அருள் உடைமை**
**முற்ற "அறிந்தார்" முதல் அறிந்தார்; தெற்ற**
**முதல் விட்டு அஃது ஒழிந்தார் ஓம்பா ஒழுக்கம்**
**முயல் விட்டுக் காக்கை தினல் (பழமொழி : 141)**

எனக் கூறுவதன் மூலம் 'முற்ற அறிந்தார் முதல் அறிந்தார்' என்றுள்ளதால் முதல் எனக் குறிப்பிடுவதும் 'அன்பும்' 'அருளும்' கொண்ட இறைவனை என்றே கொள்ளுவோமாயின் அன்புதான் முதன்மையானது என்பதும் விளங்கும். இத்தகைய 'அன்பு' மட்டுமே

ஒருவர்க்கு அவர் செல்லும் உலகத்துக்கு அணிகலனாக விளங்கும் என்பதை,

> **நிலத்துக்கு அணி என்ப, நெல்லும் கரும்பும்**
> **குளத்துக்கு அணி என்ப தாமரை; பெண்மை**
> **நலத்துக்கு அணி என்ப நாணம்; தனக்கு அணி**
> **தான்செல் உலகத்து அறம் (நான்மணிக்கடிகை : 9)**

என நான்மணிக்கடிகை கோடிட்டுக் காட்டுகிறது. "செல் உலகத்து அறம்" என்பது தாம் வாழுகின்ற உலகத்தின் ஒழுக்கம். அதாவது "'அன்பு" என்பதைத் தனக்கு அணியாகத் தனி மனிதர் அணிந்து கொள்ள வேண்டும் என்பதாலேயே நிலத்துக்கும், குளத்துக்கும் பெண்மை நலத்துக்கும் உரிய அணிகலன்கள் பட்டியலிடப்பட்டுப் பின் தன்னை உணர்ந்தவர் அணியும் அணி என்னவென்பது "சிறப்புடைய பொருளாய்ப் பிறபடக்கிளத்தல்" என்ற உத்திப்படி கூறப்பட்டுள்ளது.

"அறிய வேண்டியதை அறிந்து" என்பது அன்பான கடவுளை, கடவுளின் அன்பை, அன்பினால் கருணையும் இரக்கமும் கொண்டு பிறர்க்கு நல்லதே செய்யும் நெறியாளராக நாம் மாறிவிடுவோம் என்பதை "நன்று அறியும் மாந்தரின்" பண்புகள் என அன்புடையோர் பற்றிக் கீழ்வருமாறு திரிகடுகம் குறிப்பிடுகிறது.

> இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமையும், இவ்வுலகின்
> நில்லாமை உன்னும் நெறிப்பாடும், எவ்வுயிர்க்கும்
> துன்புறுவ செய்யாத தூய்மையும் – இம் மூன்றும்
> நன்று அறியும் மாந்தர்க்கு உள (திரிகடுகம் 68)

### தன்னையே அளிப்பது அன்பு

உண்மையான அன்பு இருப்பின், பிறர்க்காக உயிரையே கொடுக்க முன்வரும் அத்தகையாரே அன்பின் முழு உருவமாக வாழ்பவர்.

> தம் நண்பர்களுக்காக உயிரைக் கொடுப்பதை விட சிறந்த அன்பு யாரிடமும் இல்லை (யோவான் 15:12)

எனும் இயேசுவின் மொழிகளுக்கொப்ப,

**சாதல், பொருள் கொடுத்தல், இன்சொல், புணர்வு**
**உவத்தல்**
**நோதல், பிரிவில் கவறலே, ஓதலின்**
**அன்புடையார்க்கு உள்ளன ஆறு குணம் ஆக**
**மென்புடையார் வைத்தார், விரித்து** *(ஏலாதி 68)*

எனப் போய்தீர் புலவர் பொருள் புரிந்து ஆராய்ந்து எழுதியுள்ளார் ஏலாதியில். இத்தகை அன்புடையோர் பேணிக் காக்க வேண்டிய ஒழுக்கங்கள் யாவை, அவற்றின் பேணுதலாற் பெறும் பலன்கள் யாவை எனப் பின்வரும் பக்கங்களில் காண்போம்.

# 6. ஒழுக்கமுடைமை

*ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்*
*ஓதலின் சிறந்தன்று, ஒழுக்கம் உடைமை*
*(முதுமொழிக் காஞ்சி 1)*

### உடைமைகள்

இம்மண்ணுலகில் வாழும் மக்கட்கு "உடைமைகள்" யாதெனக் கேட்பின் மண், பெண், பொன் அல்லது பொருள் என எளிதாகக் கூறிவிடலாம். ஆனால், இந்த உடைமைகள் நிலையானவை அல்ல என்பதை உணர்ந்தே முதுமொழிக் காஞ்சி ஒழுக்கம் உடைமையை இவ்வாறு வலியுறுத்துகிறது.

''காஞ்சி' என்பது பல்வேறு நிலையாமைகளைக் குறித்தது என்பர் தொல்காப்பியர். இந்த உடைமைகளும் "நிலையானவை" அல்ல என்பதாலேயே நிலையான உடைமைகள் என 1. அன்பு உடைமை 2. அடக்கம் உடைமை 3. ஒழுக்கம் உடைமை 4. பொறை உடைமை 5. அருள் உடைமை 6. அறிவு உடைமை 7. ஊக்கம் உடைமை 8. ஆள்வினை உடைமை 8. பண்பு உடைமை 10. நாண் உடைமை எனப் பத்துவகை உடைமைகளை மட்டுமே வள்ளுவர் உண்மையான உரிமைகளாக உரிய முக்கியத்துவம் கருதி வரிசைப்படுத்தியுள்ளார்.

"வெள்ளாளர் மரபுக்கு வேதம்" ஆக விளங்கும் நாலடியார், தம் மெய்ப்பொருளியல் கோட்பாடுகட்கு உட்பட்டும் பொறையுடைமை, அறிவு உடைமை ஆகிய இரண்டை மட்டுமே உடைமைகளாக எடுத்து இயம்புகிறது.

### போற்றுதற்குரிய ஒழுக்கம்

ஆக, தலைசிறந்த மூன்று உடைமைகளில் அன்பு, அடக்கம், ஒழுக்கம் ஆகியவற்றில், மூன்றாவதாகிய ஒழுக்கம்

என்பதில் முன்னிரண்டும் அடங்கும். உலக நடைமுறையை நன்கு அறிந்து எல்லோருக்கும் இன்பம் கொடுக்கும் வகையில் ஒழுகுவதே மக்கட்பண்பு என்று சொல்ல வேண்டும் என ஒன்பது வகை ஒழுக்க நெறிகளைக் கூறும் கலித்தொகையும் ஒழுக்கத்தை மூன்றாவது நெறியாக,

**பண்பு எனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்**

என மனித நேயத்தை எடுத்துரைக்கும் புனித நெறியாகப் புலப்படுத்துகிறது. ஒழுக்கமாக வாழ்வதற்கு உரிய நெறிகள் என எட்டுவகைச் சீலங்களைப் பாட்டுப் பாடிக் கூறி மனதில் நிறுத்தி வைத்துக் கடைப்பிடிக்க வேண்டியவை பற்றிக் கூற முற்பட்டு,

**இறுதியாக சகோதர சகோதரிகளே**
**உண்மையானவை எவையோ**
**கண்ணியமானவை எவையோ**
**நேர்மையானவை எவையோ**
**தூய்மையானவை எவையோ**
**விரும்பத்தக்கவை எவையோ**
**பாராட்டுதற்குரியவை எவையோ**
**நற்பண்புடையவை எவையோ**
**போற்றுதற்குரியவை எவையோ**

அவற்றையே மனத்தில் இருத்துங்கள். நீங்கள் என்னிடம் கற்றுக் கொண்டவை, என் வழியாய்ப் பெற்றுக் கொண்டவை, என்னிடம் கேட்டறிந்தவை, என் வாழ்வில் நீங்கள் கண்டுணர்ந்தவை யாவற்றையும் கடைப் பிடியுங்கள். அப்போது அமைதியை அருளும் கடவுள் உங்களோடிருப்பார்.

*(பிலிப்பியா 4: 8-9)*

எனத் திருவிவிலியத்தில் மனித நடை நெறிகளாகப் புனித பவுல் எடுத்துரைக்கிறார். உண்மையானது, கண்ணியமானது, நேர்மையானது, தூய்மையானது, விரும்பத்தக்கது, பாராட்டுக் குரியது, நற்பண்புடையது, போற்றுதற்குரியது எவை என நாம் அறியாமல் இருந்துவிடக் கூடாது என்பதற்காகக் கிறிஸ்துவ ஒழுக்கம் எது என மேலும் விளக்கப் போந்து

உங்கள் அன்பு கள்ள மற்றதாக இருப்பதாக! தீமையை வெறுத்து நன்மையைப் பற்றிக் கொள்ளுங்கள். உடன் பிறப்புகள் போன்று ஒருவர்க்கொருவர் உளங்கனிந்த அன்பு காட்டுங்கள்; பிறர் உங்களை விட மதிப்புக்கு உரியவரென எண்ணுங்கள்; விடா முயற்சியோடும் ஆர்வம் மிக்க உள்ளத்தோடும் ஆண்டவர்க்குப் பணி புரியுங்கள். எதிர்நோக்கி இருப்பதில் மகிழ்ச்சி கொள்ளுங்கள்; துன்பத்தில் தளரா மனத்துடன் இருங்கள்; இறை வேண்டலில் நிறைந்திடுங்கள். வறுமையுற்ற இறை மக்களோடு உங்களிடமுள்ளதைப் பகிர்ந்து கொள்ளுங்கள்; விருந்தோம்பலில் கருத்தாய் இருங்கள்.

உங்களைத் துன்புறுத்துவோருக்கு ஆசி கூறுங்கள். ஆம், ஆசி கூறுங்கள்; சபிக்க வேண்டாம். மகிழ்வாரோடு மகிழுங்கள்; அழுவாரோடு அழுங்கள். நீங்கள் ஒரு மனத்தவராய் இருங்கள். உயர்வு மனப்பான்மையைக் கொள்ளாமல் தாழ் நிலையில் உள்ளவர்களோடு நன்கு பழகுங்கள். நீங்கள் உங்களையே அறிவாளிகளாகக் கருதிப் பெருமிதம் கொள்ள வேண்டாம்.

தீமைக்குப் பதில் தீமை செய்யாதீர்கள்; எல்லா மனிதரும் நலமெனக் கருதுபவை பற்றியே எண்ணுங்கள். இயலுமானால் உங்களால் முடிந்தவரை எல்லாரோடும் அமைதியுடன் வாழுங்கள் *(உரோமையர் 12 : 9-18)*

என விவிலியத்தில் நன்மையால் தீமையை வெல்வதற்கு அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது.

**உயிரினும் மேலான ஒழுக்கம்**

இவ்வாறு கடைப்பிடிக்கப்படும் ஒழுக்கம் உயிரினும் மேலாகப் பேணப்பட்டால் அது பெருமையும் மேன்மையும் கொடுக்கும் என்பதைத் திருவள்ளுவர்,

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்** *(திருக்குறள் 131)*

என்று விளக்கினார். அவ்வாறு ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து இவ்வுலகில் வாழாவிடில் மேலான கல்வி பல பெற்றிருப்பினும் அவர் அறிவில்லாதவராகவே கருதப்படுவார் என்பதை

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார்** *(திருக்குறள் 140)*

என்றும் அவர் வலியுறுத்தியுள்ளார்.

**ஒழுக்கத்தில் நிலைத்திருத்தல்**

விரும்பத்தக்க, பாராட்டுக்குரிய, போற்றுவதற்குரிய ஒழுக்கம் எது எனத் தெரிவு செய்து மட்டுமே நாம் மேற்கொள்ள வேண்டுமேயல்லாமல் தீய ஒழுக்கங்களை அல்ல. இவ்வாறு மேற்கொண்டால் மட்டுமே அது இம்மைக்கும் மறுமைக்கும் பயனுள்ளதாக அமையும்.

**ஓதநீர் வேலி உலகத்தார் இந்நெறி**
**காதலர் என்பது அறிந்தல்லால் - யாதொன்றும்**
**கானக நாட! பயிலார்; பயின்றதூஉம்**
**வானகம் ஆகி விடும்** *(பழமொழி 393)*

என்று "பயின்றது வானகம் ஆகிவிடும்" என்ற பழமொழி மூலம் உலகோர் விரும்பும் நல்லொழுக்க நெறியில் நாம் நிலைத்திருக்க வேண்டும் எனப் பகரப்பட்டுள்ளது.

குற்றமற்ற ஒழுக்கம் கண்டோரால் விரும்பப் படும் தன்மையது என்பதால் அரிய அறச் செயலைப் போன்றது என்றும் ஒழுக்கம் கடைப்பிடிக்கப்படாமல் வழுக்கி விடும்பொழுது அது பிறரைக் கொலை செய்வது போன்றது என்றும் ஒழுக்கத்தை வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியத்தையும் சிறப்பையும் விளக்கி நாகனார் தமது நான்மணிக்கடிகையில் பின்வருமாறு விளம்புகிறார்.

**திரு ஒக்கும் தீதுஇல் ஒழுக்கம்; பெரிய**
**அறன் ஒக்கும் ஆற்றின் ஒழுகல்; பிறனைக்**
**கொலை ஒக்கும், கொண்டு கண்மாறல், புலை ஒக்கும்**
**போற்றாதார் முன்னர்ச் செலவு** **(நான்மணிக்கடிகை 6)**

## குற்றமற்ற ஒழுக்கம்

"செரு அடுதோள் நல்லாதன்" எனப் போற்றப்படும் திரிகடுக ஆசிரியர், 'நல்வினை ஆர்க்கும் கயிறு' எனக் கூறும் மூன்று வகை அறங்களில்,

> **தானம் கொடுக்கும் தகைமையும், மானத்தால்**
> **குற்றம் கடிந்த ஒழுக்கமும், தெற்றெனப்**
> **பல்பொருள் நீங்கிய சிந்தையும் இம்மூன்றும்**
> **நல்வினை ஆர்க்கும் கயிறு** ***(திரிகடுகம் 23)***

எனக் குற்றமற்ற ஒழுக்கம் என்பதை இரண்டாவது ஒழுக்கமாக நவின்றுள்ளார்.

## ஒழுக்கம் வழுக்கின் இழிவு

இவ்வாறு நல்லொழுக்கம் பேணுபவர் தவிர்க்க வேண்டிய நிகழ்ச்சிகள், இடங்கள் யாவை, அவ்வாறு தவிர்க்காமல் சென்றால் அவர்க்கு இழுக்கு வந்து சேருவதுடன் உயிர்க்கும் ஆபத்து வரும் எனக் கணிமேதாவியார் ஏலாதியில் பின்வருமாறு எச்சரிக்கிறார்.

> **கூத்தும், விழவும், மணமும், கொலைக் களமும்**
> **ஆர்த்த முனையுள்ளும், வேறு இடத்தும், ஒத்தும்**
> **ஒழுக்கும் உடையவர் செல்லாரே; செல்லின்**
> **இழுக்கும் இழவும் தரும்** ***(ஏலாதி 62)***

கபில தேவரின் இன்னா நாற்பதில் *(32)*,

> **தன்னைத்தான் போற்றாது ஒழுகுதல் நன்கு இன்னா**

என ஒழுக்க நெறியில் தன்னைத் தானே பேண வேண்டும் என்றும், பூதஞ்சேந்தனாரின் இனியவை நாற்பதில்

> **பட்டாங்கு பேணிப் பணிந்து ஒழுகல் முன் இனிதே**
> ***(இனியவை நாற்பது 19)***

என்றும் ஒழுக்கமுடைமை வரையறுக்கப்பட்டுள்ளது.

மேற்காணும் ஒழுக்கங்களில் தலை சிறந்த ஒழுக்கங்களில் ஒன்றாகிய தந்தை தாய்ப் பேணல் பற்றி அடுத்து வரும் பக்கங்களில் ஆய்வோம்.

# 7. தந்தை தாய்ப் பேணல்

*அன்னை யானவன் தாதைக்கும்*
*அதிகம் அன்னையும் பிதாவும்*
*முன்னையோர் தெய்வ மென்ற*
*மொழிக்கெவர் முதன்மை பூண்டார்?*
*பின்னொ ராச்சிரமத் தேகிப்*
*பிதாவையும் வணக்கங் கொள்ளுந்*
*சன்னி யாசிகளும் வந்தத்*
*தாயரைத் தொழுவ ரன்றே*
*(பிரபோத சந்திரோதயம், மோக.10)*

*கண்ணில் காணும்*

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதும் துறவறம் பூண்டவரும் தன்னை ஈன்றாளைத் தேடி வந்து பார்த்துச் செல்வர் என்பதும் மேற்காணும் பாடலில் கவியோகி சுத்தானந்த பாரதியாரால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

> *உன் தந்தையையும் தாயையும் மதித்து நட. இதனால் உன் கடவுளாகிய ஆண்டவர் உனக்கு அளிக்கும் நாட்டில் நீ நெடுநாள் நலமுடன் வாழ்வாய். உன் கடவுளாகிய ஆண்டவர் உனக்கு இடும் கட்டளை இதுவே. (இணைச்சட்டம் 5:16)*

எனத் திருவிவிலியமும் கூறுகிறது.

தந்தையையும் தாயையும் மதித்து நடந்தால் உடல் நலத்துடன் நீண்ட ஆயுளை ஆண்டவர் அளிப்பார் எனும் அருள்மொழி விவிலியத்தில் அருளப்பட்டுள்ளது. இதற்கு மாறாக,

> *தந்தையைக் கொடுமைப் படுத்தித் தாயைத் துரத்தி விடும் மகன், வெட்கக் கேட்டையும் இழிவையும் வருவித்துக் கொள்வான் (நீதி மொழிகள் 19:26)*

*என்பதோடு,*

> *பெற்ற தந்தைக்குச் செவிகொடு; உன் தாய் முதுமை அடையும்போது அவளை இழிவாக எண்ணாதே.*
>
> *நீ உன் தந்தையையும் உன் தாயையும் மகிழ்விப்பாயாக; உன்னைப் பெற்றவளைக் களிப்புரச் செய்வாயாக. (நீதிமொழிகள் 23:22,25)*

*எனவும் வலியுறுத்துகிறது. மதித்து நடந்தால் மட்டும் போதாது. அவர் பொருளைக் கவர எண்ணக் கூடாது என்பதை,*

> *பெற்றோரின் பொருளைத் திருடி விட்டு அது குற்றமில்லை என்று சொல்கிறவன், கொள்ளைக்காரரைவிடக் கேடு கெட்டவன் (நீதிமொழிகள் 28:24)*

*எனக் கூறுகிறது விவிலியம். பொற்றோருக்கெதிரான குற்றம் இறைவனுக்கே இழைக்கப்பட்ட குற்றமாகக் கருதி மரணம் சம்பவிக்கும் என்பதை*

> ***உயிர் அனைத்தும் எனக்கே சொந்தம், பெற்றோரின் உயிர் என்னுடையது; பிள்ளைகளின் உயிரும் என்னுடையதே. பாவம் செய்யும் உயிரே சாகும் (எசேக்கியேல் 18:4)***

*என இறைவன் மொழியாக இறைவாக்கினர் எசேக்கியேல் இஸ்ரயேல் மக்களை எச்சரித்துள்ளார்.*

### *பெற்றோர்க்கும் பணிவிடை கடமை*

*ஏறத்தாழக் கி.மு.132இல் எழுதப்பட்ட ஞானம் பற்றிய கருத்துக் குவியல் அடங்கிய பென் சீரா 'பெற்றோர் பால் கடமை' என முழு அதிகாரமே எழுதியுள்ளார்.*

தந்தையரை மதிப்போர் பாவங்களுக்குக் கழுவாய்த் தேடிக் கொள்கின்றனர்.

அன்னையரை மேன்மைப் படுத்துவோர் செல்வம் திரட்டி வைப்பவருக்கு ஒப்பாவர்.

தந்தையரை மதிப்போருக்குத் தங்கள் பிள்ளைகளால் மகிழ்ச்சி கிட்டும். அவர்களுடைய மன்றாட்டு கேட்கப்படும்.

தந்தையரை மேன்மைப் படுத்துவோர் நீடு வாழ்வர். ஆண்டவனுக்குப் பணிந்து நடப்போர் தங்கள் அன்னையர்க்கு மதிப்பு அளிப்பர்.

தலைவர்கள் கீழ்ப் பணியாளர்கள் போல் அவர்கள் தங்கள் பெற்றோருக்குப் பணி செய்வார்கள்.

சொல்லாலும் செயலாலும் உங்கள் பெற்றோரை மதியுங்கள். அப்பொழுது உங்களுக்கு ஆண்டவரின் ஆசி கிடைக்கும்.

தந்தையின் ஆசி பிள்ளைகளின் குடும்பங்களை நிலைநாட்டும். தாயின் சாபம் அவற்றை வேரோடு பெயர்த்தெறிந்து விடும்.

உங்கள் தந்தையரை அவமதிப்பதில் பெருமை கொள்ளாதீர்கள்; உங்கள் தந்தையரின் சிறுமை உங்களுக்குப் பெருமை ஆகாது.

தந்தை மதிக்கப் பெற்றால் அது பிள்ளைகளுக்குப் பெருமை; தாய்க்கு இழிவு ஏற்பட்டால் அது பிள்ளைகளுக்குச் சிறுமை.

குழைந்தாய், உன் தந்தையின் முதுமையில் அவருக்கு உதவு; அவரது வாழ்நாளெல்லாம் அவர் உள்ளத்தைப் புண்படுத்தாதே.

அவரது அறிவாற்றல் குறைந்தாலும் பொறுமையைக் கடைப்பிடி; நீ இளமை மிடுக்கில் இருப்பதால் அவரை இகழாதே.

தந்தைக்குக் காட்டும் பரிவு மறக்கப்படாது. அது உன் பாவங்களுக்குக் கழுவாயாக விளங்கும்.

உன் துன்ப நாளில் கடவுள் உன்னை நினைவுகூர்வார். பகவானைக் கண்ட பனிபோல உன் பாவங்கள் மறைந்தொழியும்.

தந்தையரைக் கைவிடுவோர் கடவுளைப் பழிப்பர் போல்வர்; அன்னையர்க்குச் சினமூட்டுவோர் ஆண்டவரால் சபிக்கப்படுவர் (சீராக் 3:3-16)

எனத் திருவிவிலியத்தில் சீராக்கின் ஞானம் வெளிப்படுத்துகிறது.

**ஈன்றாரின் மிக்க கடவுள் இல்லை**

மேற்காணும் இறுதி வாக்கியத்தில் தந்தையைக் கைவிட்டால் கடவுளைப் பழிப்பது போல் என்றிருக்கத் "தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை'' எனும் பழமொழியை வழியொட்டி நான்மணிக்கடிகையும்

**கண்ணின் சிறந்த உறுப்பு இல்லை, கொண்டானின்**
**துண்ணிய கேளிர் பிறர் இல்லை; மக்களின்**
**ஒண்மைய வாய்சான்ற பொருள் இல்லை; ஈன்றாளின்**
**என்ன கடவுளும் இல் (நான்மணிக்கடிகை 54)**

என ஈன்றவளைக் கடவுளுக்கே நிகராகப் போற்ற வேண்டுமெனச் சாற்றுகிறது. இவ்வாறு கடவுளாகப் போற்றப்படுவதுடன் அவர்கள் வழிபடவும் உரியவர்கள் என்பதைத் திரிகடுகம்,

**முந்தை எழுத்தின் வரவு உணர்ந்து, பிற்பாடு**
**தந்தையும் தாயும் வழிபட்டு, வந்த**
**ஒழுக்கம் பெருநெறி சேர்தல் – இம் மூன்றும்**
**விழுப்ப நெறிதூரா வாறு (திரிகடுகம் 54)**

என்பதன் மூலம், அவ்வாறு செய்வது விழுப்பமே தரும் என நம் மூளையில் துளைத்துப் பதிய வேண்டிய பாடமாகப் புகட்டுகிறது.

இல்லறத்தில் இருப்போர் வாழ வேண்டிய ஒழுக்கங்களாக, சிறுபஞ்சமூலம்,

**கொண்டான் வழி ஒழுகல் பெண்; மகன் தந்தைக்குத்**
**தண்டான் வழி ஒழுகல்; தன்கிளை அஃது;**
**அண்டாதே**
**வேல்வழி வெம்முனை வீழாது, மன் நாடு**
**கோல்வழி வாழ்தல் குணம் (சிறுபஞ்சமூலம் 13)**

எனக் கணவன் மனைவியின் ஒழுக்கம் எவ்வாறு அமைந்தால் பயன்தரும் எனப் பகர்கிறது.

## தந்தையும் தாயும் தொழப்பட வேண்டியவர்கள்

திரிகடுகம் கூறுவது போலவே, தந்தையும் தாயும் வழிபட வேண்டியவர்கள் எனினும், அவர்களைத் தொழும் காலத்தையும் குறிப்பிட்டு, அவ்வாறு செய்வது முந்தையோர் கண்ட முறை, மரபு எனக் கூற முற்பட்ட ஆசாரக் கோவையில்

**வைகறை யாமம் துயில் எழுந்து, தான் செய்யும்**
**நல் அறமும் ஒண் பொருளும் சிந்தித்து, வாய்வதின்**
**தந்தையும் தாயும் தொழுது எழுக என்பதே –**
**முந்தையோர் கண்ட முறை (ஆசாரக் கோவை 4)**

எனப் பெருவாயின் முள்ளியார் நான்காவது பாடலில் நவின்றுள்ளார்.

இவ்வாறு தொழும்போது அவர்களைக் கடவுளைப் போல் எண்ணித் தொழ வேண்டும் என மேலும் வலியுறுத்தி,

**அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தம்முன்**
**நிகர்இல் குரவர் இவ் ஐவர்; இவர் இவரைத்**
**தேவரைப் போலத் தொழுது எழுக என்பதே**
**யாவரும் கண்ட நெறி (ஆசாரக் கோவை 16)**

எனக் கூறப்பட்டுள்ளது. கொடுமையிலும் பெரிய கொடுமை இவ்வுலகிற்கு நம்மைக் கொண்டு வந்த அன்னையைப் பேணாமல் விடுவது என்பதை

**ஆன்று அவிந்த சான்றோருள் பேதை புகல் இன்னா**
**மான்று இருண்ட போழ்தின் வழங்கல் பெரிது இன்னா**
**நோன்று அவிந்து வாழாதார் நோன்பு இன்னா; ஆங்கு**
**இன்னா**
**ஈன்றாளை ஓம்பா விடல் (இன்னாநாற்பது 17)**

எனப் பெற்றோர் வாழும் இல்லம் இனிது என்பதுடன் அவர்களைக் கண்டு எழுந்தால் அந்தக் காலைப் பொழுதும் இனிதாகி அந்த நாளே இனிய நாளாகும் என அறுதியிட்டுக் கூறுகிறது.

இவ்வாறு இறைவனைப் பத்துக் கட்டளைகளில் 4வது கட்டளையாக அருளப்பட்டு அதனைக் கடைப்பிடிக்கும் பான்மையை மூத்தோர் அறநூல்களின் வாயிலாக அறிவுறுத்தியுள்ளனர். அடுத்து அறங்களில் மிக முக்கிய அறமாகிய “கொல்லாமை” பற்றிப் பின்வரும் பக்கங்களில் ஆய்வோம்.

# 8. கொல்லாமை

*கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை*
*வல்லிடிக் காரர் வலிகயிற்றாற் கட்டிச்*
*செல்லிடு நில்என்று தீவாய் நரகிடை*
*நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே*

*(திருமந்திரம் 198)*

## கொல்லாமையே நல்லாறு

நல்ல ஒழுக்கம் எது என்றால் எந்தக் காரணத்திற்காகவும் எந்த உயிரையும் கொல்லாமல் காத்துக்கொள்ளும் நெறியே என்பதை வள்ளுவர்,

**நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
**கொல்லாமை சூழும் நெறி** *(திருக்குறள் 324)*

எனக் கொல்லாமையே சிறந்த நெறியாகக் காட்டியுள்ளார். ''மனித மனம் ஒரு மிகச் சிறந்த பணியாளன்; ஆனால் கொடுங்கோன்மையான எசமான்" எனச் சொல்லப்படுகிறது. மனம் நமது கட்டுப்பாட்டில் இருக்க வேண்டுமானால் நல்ல சிந்தனைகளைச் சிந்தித்து, நற்செயல்களைச் செய்யவேண்டும். ஒருமுறை வழுவி ''அதனால் குற்றமில்லை'' எனத் தீய சுதந்திரத்திற்கு வழிவிட்டால் போதும் அது கொடுங்கோன்மையான எசமான் ஆகி இறுதியில் நம்மையே அழித்துவிடும். ஓர் உயரிய நோக்கம் கருதி நாம் செயலாற்றி வாழ்ந்து வரும்போது, உணர்வுப் பூர்வமாக நமது பணிகளில் ஈடுபடும்போது, "முழு மனதுடன்" அதில் மூழ்கி இருக்கும் போது உணர்வுகள் பெருக்கெடுத்து அப்பணியை நன்முறையில் முடிப்பதற்கு நமக்குள் சக்தி ஊற்றெடுத்துப் பெருகும். உயரிய நோக்கம் அல்லாமல், மனக் கட்டுப்பாடு இல்லாமல் "தான் தோன்றி'' வாழ்க்கை வாழ்வோமானால், வாழ்வில்

பொறுமையின்மை, அன்பின்மை, வெகுளி மயக்கம் இவை மட்டுமே பெருக்கெடுத்து வெடிக்கும். மனக் கட்டுப்பாடு இல்லாதவர்கள் மனதிற்கு அடிமைப்பட்டு மனம் எசமானாகி, பிறரைக் கொலை செய்யவோ, தன்னையே தற்கொலை செய்து கொள்ளவோ உந்தும்.

### நாம் வாழும் கொலைக்களம்

"கொலை செய்யாதிருப்பாயாக" எனத் திருவிவிலியம் கூறிடும் ஐந்தாவது கட்டளை அப்போதைய வரலாற்றுச் சூழலமைவில் போர் மிகுந்த காலக்கட்டத்தில் தேவையான ஒன்றாயிருந்தது. ஆயினும் நாடு விட்டுப் பிறிதொரு நாட்டிற்குப் பயணமாக வந்த இஸ்ரயேல் மக்கள், நிலையில்லா வாழ்க்கை, பிறன் பொருளை நாடுவது, பொன் பொருளைக் கொள்ளையடிக்க முயன்று கொலையும் செய்வது அன்றாட நிகழ்வாக இருந்தது. சமூகத்தில் வளர்ந்து வரும் மக்கள் கூட்டம் தமக்குத் தலைவனைத் தெரிவு செய்வது கூட முற்காலத்தில் தலைவர்கள் அரசர்களின், பேராசை காரணமாகப் பிற அரசைத் தனக்கு மண்டியிட்டுக் கப்பம் கட்டச் செய்வது அன்றேல் கழுமரம் ஏற்றிக் கொல்வது போன்ற கொலை வெறியாட்டம் வரலாற்றில் காலங்காலமாய் நிகழ்ந்ததாகும்.

நாம் வாழுகின்ற, இன்றைய சமுதாயத்தில், கழுத்திலிருக்கும் தங்கச்சங்கிலியைத் திருடச் செல்லக் கொலை; அடுத்தவன் மனைவியுடன் இன்பமாயிருந்ததைக் கண்டு விட்டவனை இடையூறாகக் கருதிக் கொலை; கொலையும் செய்வாள் பத்தினி என்ற முதுமொழிக்கேற்பக் குடிகாரக் கணவனைக் கொல்லும் மனைவி என அன்புக் களமாகப் படைக்கப்பட்ட பூமி கொலைக் களமாக மனிதனால் மாற்றப்பட்டுள்ளதைப் பத்திரிகைகளில் படிக்கிறோம்.

### கொலையின் விளைவு

"கொலை செய்யாதே" என்ற இறைவனின் கட்டளையை மீறிச் செல்வோர் மீது இறைவனின் சாபம் வந்து சேரும் எனத் திருவிவிலியம் கூறுகிறது.

> தனக்கு அடுத்திருப்பவரை ஒளிந்திருந்து கொல்பவன் சபிக்கப்படட்டும் (இணைச்சட்டம் 27. 24)

*கொல்வதற்கு உடந்தையாய் இருப்பவனுக்கும் அதே தண்டனை கிடைக்கும் என்பது.*

*குற்றமற்றவரைக் கொல்வதற்காகக் கையூட்டு வாங்குபவர் சபிக்கப்படட்டும்.*

*(இணைச்சட்டம் 27. 25)*

அவ்வாறு குற்றமற்றவராயிருந்த இயேசுவைக் கையூட்டுப் பெற்றுக் கொண்டு காட்டிக் கொடுத்த யூதாசு இங்காரியோத்து எனும் சீடன் இறைவனின் சாபத்தைப் பெற்றான். தம்மைக் காட்டிக் கொடுக்க இருப்பவன் பற்றித் தம் சீடர்களிடம் முன் கூட்டியே பின்வருமாறு இயேசு கூறினார் :

*மானிட மகன் தம்மைப் பற்றி மறைநூலில் எழுதியுள்ளவாறே போகிறார். ஆனால் ஐயோ! அவரைக் காட்டிக் கொடுக்கிறவனுக்குக் கேடு! அம்மனிதன் பிறவாதிருந்தால் அவனுக்கு நலமாய் இருந்திருக்கும் என்றார். (மாற்கு 14:21)*

*அதன்பின் இயேசு தண்டனைத் தீர்ப்பு அடைந்ததைக் கண்டபோது அவரைக் காட்டிக் கொடுத்த யூதாசு மனம் வருந்தித் தலைமைக் குருக்களிடமும் மூப்பர்களிடமும் முப்பது வெள்ளிக் காசுகளையும் திருப்பிக் கொண்டு வந்து ''பழி பாவமில்லாதவரைக் காட்டிக் கொடுத்துப் பாவம் செய்தேன்" என்றான். அதற்கு அவர்கள் :*

*"அதைப்பற்றி எங்களுக்கென்ன? நீயே பார்த்துக் கொள்" என்றார்கள். அதன் பின்பு அவன் அந்த வெள்ளிக் காசுகளைக் கோவிலில் எறிந்து விட்டுப் புறப்பட்டுப் போய்த் தூக்குப் போட்டுக் கொண்டான். (மத்தேயு 26 : 3-5)*

*தம்மைப் பிடிக்க வந்த பணியாளர் ஒருவரின் காதைச் சீடருள் ஒருவன் துண்டித்த போது இயேசு அவரிடம்,*

> உனது வாளை அதன் உறையில் திரும்பப்போடு. ஏனெனில் வாளை எடுப்போர் அனைவரும் வாளால் அழிந்து போவார். (மத்தேயு 26: 52)

எனக் கொலைக்குக் கிடைக்கும் கைம்மாறு கொலையே என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளார்.

## முதல் கொலை

மனித வரலாற்றின் முதல் கொலை ஆகிய-உடன் பிறப்பாகிய ஆபோலைக் காயின் கொன்றது. பொறாமையால் அவனைக் கண்டிக்க ஆண்டவர் கூறியது.

> நீ என்ன செய்துவிட்டாய்? உன் சகோதரரின் இரத்தத்தின் குரல் மண்ணிலிருந்து என்னை நோக்கிக் கதறிக் கொண்டிருக்கின்றது. இப்பொழுது, உன் கைகள் சிந்திய உன் சகோதரனின் இரத்தத்தைத் தன் வாய் திறந்து குடித்த மண்ணை முன்னிட்டு நீ சபிக்கப்பட்டிருக்கிறாய். நீ மண்ணில் பயிரிடும் பொழுது அது இனிமேல் உனக்குப் பலன்தராது. மண்ணுலகில் நீ நாடோடியாக அலைந்து திரிவாய் என்றார். (தொடக்க நூல் 4-10-12)

> ஒரு மனிதரின் இரத்தத்தை எவர் சிந்துகிறாரோ அவரது இரத்தம் வேறொரு மனிதரால் சிந்தப்படும். ஏனெனில் கடவுள் மனிதரைத் தம் உருவில் உண்டாக்கினார். (தொடக்க நூல். 9 : 6)

எனப்பெரும் வெள்ளப்பெருக்கில் "நோவா"வையும் இதர உயிரினங்களையும் காத்த கடவுள் இவ்வாறு கூறியுள்ளார். எனவேதான், நாம் உண்பவற்றைக் கூடப் பகுத்துப் பார்த்து உண்டு உயிர்களைக் கொல்லாமல் பேண வேண்டும் என்பதை வள்ளுவனார்,

> **பகுத்துஉண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்**
> **தொகுத்தவற்றுள் எல்லாம் தலை (திருக்குறள். 322)**

எனச் சான்றோர் நல்லொழுக்கம் எனக் கூறுபவற்றுள் தலையாய ஒழுக்கம் என ஓதுகிறார்.

**உயிர்கொல்லாது உண்டல்**

உடலுக்கு ஊட்டம் தரும் உணவு வகைகளில் ஒன்றாகிய தயிரைத் தயிராகவே உண்ண இயலும். ஆனால் சுவையைப் பெரிதாகக் கருதி, தயிரை வேறொரு உணவுப் பொருளாக மாற்றி உண்பவரும் உளர். அதுபோலவே, மனித உள்ளத்தில் அறியாமை மயக்கத்தினால், கொலை புரிந்து மறுமை இன்பத்தையும் சிலர் விரும்புவர். அவர்கள் உரிய ஞானத்துடன் அனைத்து உயிரையும் அருளுடன் பேணிக் காக்க மாட்டார்கள். பிற உயிர்களைக் கொன்று அதன் உணவைத் தின்று வாழ்வார்கள் என மனித உயிர் மட்டுமல்லாமல், அனைத்து உயிரினமும் காக்கப்பட வேண்டும் எனக் கூற முற்படும் பழமொழி,

> செறலின் கொலை புரிந்து, சேண் உவப்பர் ஆகி
> அறிவின் அருள் புரிந்து செல்லார், பிறிதின்
> உயிர் செகுத்து, ஊன் துய்த்து ஒழுகுதல் – ஓம்பார்
> தயிர் சிதைத்து, மற்றொன்று அடல் (பழமொழி 164)

என்கிறது. மேற்காணும் கருத்தையே வழிமொழியும் வகையில் நான்மணிக்கடிகை

> இனிது உண்பான் என்பான் உயிர் கொல்லாது
> உண்பான் (நான்மணிக்கடிகை 58)

எனக் கொல்லாமையை மேலும் வலியுறுத்துகிறது.

"கொன்றால் பாவம் தின்றால் தீரும்" என்ற ஊன் உணவு மீதான ஆசையில் கூறப்பட்ட பழமொழியைப் பாமர மக்கள் கூறுவர். அவர்கள் முழு அளவு மூளை வளர்ச்சி அடைந்த முழு மனிதர் ஆகார் எனத் திரிகடுகம் கடுஞ்சொல்லாற் கூறுகிறது.

> கொல்வது தான் அஞ்சான் வேண்டலும், கல்விக்கு
> அகன்ற இனம் புகுவானும், இருந்து
> விழுநிதி குன்று விப்பானும்–இம் மூவர்
> முழுமக்கள் ஆகற்பா லார் (திரிகடுகம் 87)

> கொன்று உண்பான் நாச் சாம் (சிறுபஞ்சமூலம் 8)

எனச் சாபமே இடுவது போல் கொல்லாமையைப் போதிக்கும் சிறுபஞ்ச மூல ஆசிரியர் காரியாசான்,

**உயிர் நோய் செய்யாமை (சிறுபஞ்சமூலம் 30)**

விட்டொழிந்தால் அது இனிய தவம் எனவும் கூறுகிறார்.

**கொன்றான், கொலையை உடன்பட்டான், கோடாது**
**கொன்றதனைக் கொண்டான், கொழிக்குங்கால்,**
**கொன்றதனை**
**அட்டான், இட உண்டான், ஐவரினும் ஆகும் எனக்**
**கட்டு எறிந்த பாவம் கருது (சிறுபஞ்சமூலம் 68)**

எனக் கொலைப் பாதகம் புரிந்தவன், அக்கொலைக்கு உடந்தையாய் இருந்தவன், கொன்ற பொருளால் பெற்றவன், அதனைச் சமைத்தவன், சமைத்ததை உண்டவன் ஆகிய ஐந்து பேரும் கட்டுக்கடங்காத பாவிகள் எனவும் சாடுகிறார்.

மனித உயிர்களைக் கொல்லாமல், பிற உயிர்களையும் கொல்லாமல், இறைச்சிகாக ஆசைப்படாமல் இருப்பவன் தேவர்கட்கும் மேலானவனாக ஆகிவிடலாம் என்பதை ஏலாதி

**கொலை புரியான், கொல்லான், புலால் மயங்கான்,**
**கூர்த்த**
**அலைபுரியான், வஞ்சியான், யாதும் நிலை திரியான்,**
**மண்ணவர்க்கும் அன்றி-மதுமலி பூங்கோதாய்**
**விண்ணவர்க்கும் மேலாய் விடும் (ஏலாதி 2)**

என எடுத்துரைக்கிறது.

*அடுமனை பார்த்திருந்து ஊண் இன்னா*
*(இன்னா நாற்பது 36)*

*என இன்னா நாற்பதும்,*

**கொல்லாமை முன் இனிது (இனியவை நாற்பது 5)**

என இனியவை நாற்பதும் புலால் மறுத்தலையும் கொல்லாமையையும் போதிக்கும் வேளையில், கொலை செய்பவர்கள் 'எவரிடமும் அன்பு இல்லாதவர்கள்', 'எவரையும் சாராதவர்கள்' என்பதைச் "சார்பு இலோருக்கு உறுகொலை எளிது" என முதுமொழிக் காஞ்சியில் (8-10) கூடலூர் கிழார், குறள் வெண் செந்துறைச் செய்யுளில் செப்பினார்.

# 9. பரத்தமை செய்யாமை

*தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி*
*வலைப்பட்டார் மற்றை யவர்* *(திருக்குறள் 348)*

## கொழுந்து விட்டு எரியும் காமம்

கற்கண்டும் கரும்பும் நாணும் வகையில் இனிமையான சொற்களை, பிறரைத் தம்பால் ஈர்க்கும் வகையில் பேசியும், கண்களால் மயக்கியும், உளங்கவரும் வஞ்சம் நிறைந்த நெஞ்சமுடைய பெண்களும் சரி, ஆண்களும் சரி ஏமாற்றுபவர்களே. அவர்களால் துன்பமே விளையும்.

அழகினை நாம் இரசிக்கலாம்; ஆனால் சிறைப்பட்டு விடக் கூடாது. அதனைச் சொந்தமாக்கிக் கொள்ளலாம். அது நம்மை அடிமைப்படுத்தி விடலாகாது. பிறர்க்கு நம்மை முழுதும் அளிக்க வல்ல, உயரிய நோக்கில் உந்தப்பட்டு வாழ்வில் நடைபோடவேண்டுமேயல்லாமல் சிற்றின்பத்தில் காலத்தைக் கழிக்கக் கூடாது. வாழ்வில் வெற்றி என்பது நல்லதுதான்; ஆனால் அதனினும் சிறந்தது அர்த்தமுள்ள வாழ்வாக வாழ்வதே என்று தத்துவ ஞானிகள் அத்தனை பேரும் வலியுறுத்திக் கூறுவர்.

சிற்றின்ப ஆசையையும், விபசாரம் செய்வதையும் வன்மையாகக் கண்டிக்கும் திருவிவிலியத்தில் 'சீராக்கின் மகனை ஏசுவின் ஞானம்' அல்லது பென்சீரா எனப்படும் ஞானநூலில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது.

> இரண்டுவகை மாந்தர் பாவங்களைப் பெருக்குகின்றனர்; மூன்றாவது வகையினர் சினத்தைத் தூண்டி விடுகின்றனர்.

கொழுந்துவிட்டு எரியும் காமவெறி கொண்டோர்: அவர்களது காமவெறி எரிந்து அடங்கினாலன்றி அணையாது.

தம் உறவினர்களோடு முறையற்ற உறவு கொள்வோர்: அந்த ஆசை அடங்கும் வரை தீநெறியை அவர்கள் விட மாட்டார்கள்.

தகாத உறவு கொள்வோருக்கு எல்லா உணவும் இனியதே; இறக்கும் வரை அவர்கள் தளர்ந்து போக மாட்டார்கள் *(சீராக் 23: 16-17)*

## இருபாலர்க்கும் பொதுவான அறிவுரை

இத்தகைய காமுகர் நகர வீதிகளில் தண்டிக்கப்படுவர் என்றும் எதிர்பாரா இடத்தில் பிடிபடுவர் என்றும் எச்சரிக்கும் பென் சீரா, விபசாரம் செய்வதைக் கீழ்வருமாறு கூறுகிறார்.

*தன் கணவரை விட்டு விலகி, வேறு ஆடவன்*
*மூலம் அவருக்கு வழித் தோன்றலை உருவாக்கும்*
*மனைவிக்கும் அவ்வாறே நேரும்.*

*முதலாவதாக, அவள் உன்னத இறைவனின்*
*திருச்சட்டத்திற்குக் கீழ்ப்படிவதில்லை;*
*இரண்டாவதாக, தன் கணவருக்கு எதிராகக்*
*குற்றம் புரிகிறாள்;*

*மூன்றாவதாக, தன் கெட்ட நடத்தையால்*
*விபசாரம் செய்கிறாள்; அடுத்தவர் மூலம்*
*பிள்ளைகளைப் பெற்றெடுக்கிறாள்*
*(சீராக் 23: 22-23)*

மேற்காணும் வாசகங்களைப் படிக்கும்போது அவை பெண்களுக்காகக் கூறப்பட்டவையாக இருப்பினும், இதனை நன்கு அறிந்தே புரட்சிக் கருத்துக்களாய்ப் புகட்டியவராகிய இயேசு, விபசாரம் செய்யாதே என்பது பெண்ணுக்கு மட்டுமல்ல - பொதுவான அறிவுரை - இருபாலர்க்கும் பொருந்தும் என்பதைப் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

''விபசாரம் செய்யாதே'' எனக் கூறப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்; ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்கும் எவரும் தம் உள்ளத்தால் ஏற்கெனவே அப்பெண்ணோடு விபசாரம் செய்தாயிற்று. உங்கள் வலக்கண் உங்களைப் பாவத்தில் விழச்செய்தால் அதைப்பிடுங்கி எறிந்து விடுங்கள். உங்கள் உடல் முழுவதும் நரகத்தில் எறியப்படுவதைவிட உங்களின் உறுப்புகளில் ஒன்றை நீங்கள் இழப்பது நல்லது. உங்கள் வலக்கை உங்களைப் பாவத்தில் விழச் செய்தால் அதையும் உங்களிடமிருந்து வெட்டி எறிந்து விடுங்கள். உங்கள் உடல் முழுவதும் நரகத்திற்குச் செல்வதைவிட உங்கள் உறுப்புகளில் ஒன்றை நீங்கள் இழப்பதே நல்லது. 'தன் மனைவியை விலக்கி விடுகிறவன் எவனும் மணவிலக்குச் சான்றிதழ் கொடுக்கட்டும்' எனக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன்: எவரும் தன் மனைவியைப் பரத்தைமைக்காக அன்றி வேறு எந்தக் காரணத்திற்காகவும் விலக்கி விடக்கூடாது. அப்படி செய்வோர் எவரும் அவரை விபச்சாரத்தில் ஈடுபடச் செய்கின்றனர். விலக்கப்பட்டோரை மணப்போரும் விபசாரம் செய்கின்றனர்" (மத்தேயு 5 : 27-32)

### விலங்கு அன்ன வெள்ளறிவினர்

"ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள்" என அக வாழ்க்கையின் தொடக்கத்தில் வரையறுக்கப்பட்ட இல்லற வாழ்விற்கே பொருள்படக் கூறிய பழமொழிகள் ஏராளமாக உள்ளன. கண்மூடித் தனமான காமத்தில் அன்பு இல்லாத, பொருளைப் பெறவேண்டுமென்ற நோக்குடைய பெண்டிரிடம் சிக்கி, பிணத்தைத் தழுவுதல் போல் அவர்களைத் தழுவி, இன்பம் காணும், ஆயும் அறிவு இல்லாதவர்க்கே இத்தகைய விலை மகளிர் தெய்வமாகக் காட்சியளிப்பர் என்பதை வள்ளுவப் பெருந்தகை,

*ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்குஎன்ப*
*மாய மகளிர் முயக்கு (திருக்குறள் 918)*

என்கிறார். இத்தகைய வெறுமையான அறிவு உடையவரை, எல்லாரும் கூற எடுத்துரைத்த, சொல் ஆகும். நாலடி நானூறு மேற்கண்ட குறளையே பின்வருமாறு வழிமொழிகிறது.

*பாம்பிற்கு ஒரு தலைகாட்டி, ஒருதலை*
*தேம்படு தென் கயத்து மீன் காட்டும் ஆங்கு*
*மலங்கு அன்ன செய்கை மகளிர் தோள் சேர்வர்,*
*விலங்கு அன்ன வெள்ளறிவி னார் (நாலடியார் 375)*

என்பது அப்பாட்டு.

**தீராத மயக்கம் தீமைதரும்**

இவ்வாறு மோகத்தீயில் மூழ்கி, மயக்கத்தில் இருப்பவர்களை, பொய்த் தூக்கம் தூங்குபவர்கள், இவர்களை யாரும் தட்டி எழுப்பித் திருத்திவிட இயலாது எனக் கூற முற்பட்ட பழமொழி ஆசிரியர், பரத்தையர் மார்பிலே தன் மார்பினைச் சேர்த்துக் கொண்டு மயங்கிக் கிடப்பது முறையன்று. ஆயினும் அதனை அவனிடம் சொல்லாதிருப்பாயாக; ஏனெனில் பொய்த்தூக்கம் தூங்குபவரை எழுப்புவது அரிது என்பதைப் பின் வரும் பாடலால் பகர்கிறார்.

*தொடித்தோள் மடவார் துணைமுலை ஆகம்*
*மடுத்து, அவர் மார்பில் மகிழ்நன் மடுப்ப*
*நெறியல்ல சொல்லல்நீ, பாண – அறிதுயில்*
*யார்க்கும் எழுப்பல் அரிது*
*(பழமொழி நானூறு 222)*

*விழைவு இலாப் பெண்டிர் தோள் சேர்வு*
*(திரிகடுகம் 5)*

அருந்தவம் காட்டும் நெறிகளில் ஒன்று எனச் சாடும் திரிகடுகம்.

*காண் தகு மென் தோள் கணிகை வாய் இன்*
*சொல்லும் (திரிகடுகம் 24)*

துன்பம் தரும் என்றதோடு,

செருக்கினால் வாழும் சிறியவனும், பைத்து அகன்ற
அல்குல் விலை பகரும் ஆய்தொடியும், நல்லவர்க்கு
வைத்த அறப்புறம் கொண்டானும் – இம்மூவர்
கைத்து உண்ணார் கற்றறிந்தார் (திரிகடுகம் 25)

என இவர்களது கைகளிலிருந்து கற்றறிந்தோர் உணவுகூடப் பெற்று உண்ண மாட்டார்கள் என எடுத்தியம்புகிறது. அத்தோடு நில்லாமல்

புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த்
தோய்தல்
. . . . . . . . . . . . . . . . நன்மை இலாளர் தொழில்
(திரிகடுகம் 39)

என்றும் நவில்கிறது.

மண்பாய ஞாலத்து மாந்தர்க்கு உறுதியா
வெண்பா உரைப்பன் (கடவுள் வாழ்த்து)

எனும் காரியாசான் தனது சிறுபஞ்சமூலத்தில் தீய பெண்ணின் தொழில் என்னென்னவென்று ஐவகைத் தீமைகளை ஐயந்திரிபறக் கூறுவது பின்வருமாறு :

கள் உண்டல், காணின் கணவற் பிரிந்து உறைதல்
வெள்கிலளாய்ப் பிறர்இல் சேறல், உள்ளிப்
பிறர் கருமம் ஆராய்தல், தீப்பெண் கிளைமை
திறவது தீப்பெண் தொழில் (சிறுபஞ்சமூலம் 23)

'ஆசாரம் யாரும் அறிய, அறன் ஆய மற்றவற்றை ஆசாரக் கோவை' எனத் தொகுத்த பெருவாயின் முள்ளியார்

விலைமகளிர் காணக்கூடாத ஒளியும் அழகும் உடையவர்கள் என்பதால் மின்னல் ஒளி, வீழும் விண்மீன் போல் தம் ஒளி வேண்டுவோர் காண மாட்டார்கள் என்பதை,

மின் ஒளியும், வீழ்மீனும், வேசையர்கள் கோலமும்
தம் ஒளி வேண்டுவார் நோக்கார்;பகற் கிழவோன்
முன் ஒளியும் பின் ஒளியும் அற்று
(ஆசாரக்கோவை 51)

எனும் வெண்பா மூலம் சிந்திக்க வைக்கிறார்.

**பெண்டிர் வெய்யோர்க்குப் படுகுழி எளிது**

*காமம் முதிரின் உயிர்க்கு இன்னா (இன்னாநாற்பது 24)*

என இன்னா நாற்பது காமத்தை உயிர் குறைக்கும் நோயாகக் காட்டும் பொழுது,

*நிறை மாண்பு இல் பெண்டிரை நீக்கல் இனிதே*
*(இனியவை நாற்பது 10)*

என இனியவை நாற்பது கூறுகிறது. இப்பெண்டிரை விடம் போல் கருதி விளக்கம் வேண்டும் என்பதை

*இளமையை மூப்பு என்று உணர்தல் இனிதே;*
*கிளைஞர் மாட்டு அச்சு இன்மை கேட்டல் இனிதே;*
*தடமென் பணைத் தோள் தளிர் இயலாரை*
*விடம் என்று உணர்தல் இனிது*
*(இனியவை நாற்பது 37)*

என்றும் எச்சரிக்கிறது. கழிந்தோர் ஏனை ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமை ஆகும் முது மொழிக் காஞ்சி

*துன்பம் வெய்யோர்க்கு இன்பம் எளிது*
*இன்பம் வெய்யோர்க்குத் துன்பம் எளிது*
*உண்டி வெய்யோர்க்கு உறுபிணி எளிது*
*பெண்டிர் வெய்யோர்க்குப் படுகுழி எளிது*
*(முதுமொழிக்காஞ்சி 8:5-8)*

என எளிய பத்துக்களில் 5 முதல் 8 முடிய மேற்கண்டவாறு மொழிகிறது. "தண்டாப் பத்து" என்ற தலைப்பில்

*இன்பம் வேண்டுவோன் துன்பம் தண்டான்*
*துன்பம் வேண்டுவோன் இன்பம் தண்டான்*
*ஏமம் வேண்டுவோன் முறைசெயல் தண்டான்*
*காமம் வேண்டுவோன் குறிப்புச் செயல் தண்டான்*
*(முதுமொழிக்காஞ்சி 10:8-11)*

என ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம் எடுத்தியம்புகிறது.

தன்னை அறிதலைத் தலையாய பாடமாக்கும் அறநூல்கள் கூறும் இக்கருத்துக்களை ஒட்டி ஜோசப் காம்பெல் எனும் மேல்நாட்டு அறிஞர் இவ்வாறு கூறுகிறார்.

**எங்கு நீ தடுக்கி விழுகிறாயோ, அங்கேதான்**
**உன் புதையல் இருக்கிறது.**

விழுவது, எழுவதற்குத்தான் என்பதை வலியுறுத்தும் இவ்வரிகள் எழும்போது, கவனமாக இருக்கக் கற்றுக்கொண்டு, வீழ்ச்சியில் அடைந்த அதிர்ச்சி மேலும் வராமல் இருக்கத் தற்காத்துக் கொள்ளும் உணர்வு மேலீட்டுடன் நாம் எழ வேண்டும் என்பதையே குறிக்கும்.

தன்னில் இருக்கும், திறமைகள் புதைந்து கிடக்கும் புதையல்களை அறியாதவரே பிறர் கையை எதிர்பார்ப்பர். பிறர் பொருளுக்கு விழைவர், கவர்வர். என்பதால் களவு செய்யாதே என்ற கட்டளையைப் பற்றி அடுத்து வரும் பக்கங்களில் ஆய்வோம்.

# 10. களவு செய்யாமை

உள்ளத்தால் உள்ளலும் தீதேபிறன் பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல் (திருக்குறள் 292)

**நெஞ்சம் கள்ளாமை காக்க வேண்டும்**

மனித மனம் ஒரு குரங்கு. குரங்கு கிளைக்குக் கிளை தாவிக் கொண்டே இருக்கும். மனக்குரங்கான மனித ஆசையும் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தாவிக் கொண்டே இருக்கும். ஒரு பொருள் மீது ஆசை வந்தால் அப்பொருள் கிட்டும் வரை ஆசை அடங்காது. ஒருவேளை, ஆசைப்பட்டது கிடைத்து விட்டால் போதுமென்ற மனதுடன் திருப்தி வந்து விடாது. மறுபடியும் வேறொரு பொருள் மீது ஆசை வந்து விடும். மண், பெண், பொன் ஆகியவை மீதான ஆசையே மனிதரை ஆட்டிப் படைக்கின்றது.

மண் பெண் பொன் னாசை
மயக்கத்திலே விழுந்து
கண் கெட்ட மாடது போல்
கலங்கினேன் பூரணமே

எனப் பட்டினத்தார் போன்ற துறவி கூடத் தாம் ஆசைகட்கு அப்பாற்பட்டவரில்லை என்று இறைவனிடம் தன்னையுணர்ந்து வெளிப்படுத்தியுள்ளார். இல்லாத பொருள் மீது எல்லோர்க்கும் ஆசை வருவது இயற்கை. இந்த ஆசையே களவுக்கு வித்தாகி, திருடச் செய்து, 'அதனால் குற்றமில்லை' என்ற மனப்பாங்கை வளரச் செய்து விடுகிறது. நெஞ்சில் தோன்றும் இத்தகைய ஆசைகள் வளர்ந்து விடாமல் ஆசை தோன்றும் போதே

அதனை நீக்கி விட வேண்டும் என வலியுறுத்த விழைந்த வள்ளுவப் பெருந்தகை

**எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்**
**கள்ளாமை காக்க தன்நெஞ்சு (திருக்குறள் 291)**

எனக் 'கள்ளாமை'யின் முதல் குறளாக அமைத்துக் கூறுகிறார். நில்லாதனவற்றை நிலையானவை எனக் கருதி, பொருள் மீதான ஆசையில், வஞ்சித்து, கொன்று, அடித்துப் புடைத்து அதனை அடைந்த பின்னரும், அடங்காத ஆசையில் கொலைஞராக வாழும் புல்லர்களில் ஒருவராக நாம் இருக்கக் கூடாது என்பதற்காகவே இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

**கனவும் களங்கமும்**

களவு செய்வதும், பொய் சொல்வதும் உண்மையான மெய்ப்பொருளாகிய இறைவனின் பெயருக்கே களங்கம் விளைவிக்கும் செயல்கள். இறைவனின் சாயலில் படைக்கப்பட்ட மனிதர், நேர்மையுடைய இறைவனைப் போல வாழ வேண்டும் என்பதால், தூய்மை, நீதி பற்றிய சட்டங்களை இஸ்ரயேலருக்கு இறைவன் வழங்கியபோதே, பின்வருமாறு கூறியுள்ளார் என்பதைத் திருவிவிலியத்தில் காண்கிறோம்.

> களவு செய்யாமலும், பொய் சொல்லாமலும் ஒருவரை ஒருவர் வஞ்சியாமலும்,
>
> என் பெயரால் பொய் ஆணையிட்டு, உங்கள் கடவுளின் பெயருக்கு இழுக்கு ஏற்படுத்தாமலும் இருங்கள். நான் ஆண்டவர்!
>
> அடுத்திருப்பவரை ஒடுக்கவோ அவருக்குரியதைக் கொள்ளையிடவோ வேண்டாம் வேலையாளின் கூலி விடியும் வரை உன்னிடத்தில் இருத்தல் ஆகாது. *(லேவியர் 19 : 11-13)*

என்பது அப்பகுதி.

நாம் அன்றாட வாழ்வில் சந்திக்கும் நிகழ்வுகளில் எத்தனை திருட்டுத் தனங்களைக் கண்கூடாகக் காண்கிறோம். காலையில் பெறும் பாலில் நீர் கலந்து விற்பனை. பாத்திரம் கழுவப் பயன் பயன்படுத்தும் அரைப்புப் பொடியில் மண்

கலவை. அரிசியில் கல். காய்கறிகள் எடையில் குறைவு. சில்லறை தரும்போது குறைவாகத் தருவது. கல்லறையில் கூடக் குழிவெட்ட 4 பங்குக்கும் மேல் அதிகமாகப் பணம் பெறுதல் எனத் திருட்டு மலிந்து கிடப்பதைக் காண்கிறோம். 'வயிற்றுப் பிழைப்பு' எனக் கயிறு திரித்தாலும், அதிகமாகப் பெற்ற பணத்தால், இத்தகைய கயவர்கள் அழிந்து போவதைத்தான் காண்கிறோமே அல்லாமல், விழி இழந்து திரிவதை வேடிக்கை பார்க்கிறோமே அல்லாமல் எவரும் "நல்வாழ்வு" வாழ்ந்ததாக இந்த நானிலத்தில் சரித்திரமில்லை. அதனால்தான், உண்மையான வறுமைக்கு, பசிக்கு எனத் திருடினாலும், அது களவே ஆகும் என்பதால் அது கடவுளுக்கு எதிரான குற்றம் எனக் கூறப்பட்டுள்ளது. அதனால்தான், இந்தக் குற்றங்கட்குப் பரிகாரம் இருமடங்கு அல்ல பல மடங்கு செய்ய வேண்டும் என ஈடுகட்டுதல் சட்டம் பற்றி விவிலியம் பின் வருமாறு விளக்குகிறது.

> *ஆட்டையோ, மாட்டையோ ஒருவர் திருடி வெட்டி விட்டால் அல்லது விற்று விட்டால் ஒரு மாட்டுக்கு ஐந்து மாடு என்றும் ஒரு ஆட்டுக்கு நான்கு ஆடு என்றும் ஈடு கட்டுவார். (விடுதலைப் பயணம் 22:-1)*

> *அவர் திருடிய மாடோ, கழுதையோ, ஆடோ உயிருடன் அவர் கையில் கண்டு பிடிக்கப்பட்டால் இரு மடங்காக ஈடு கொடுப்பார். (வி.ப. 22:4)*

> *ஒருவர் இன்னொருவர் வயலிலோ, திராட்சைத் தோட்டத்திலோ கால் நடைகளை மேய விட்டால் அல்லது அவிழ்த்து விட்டவை பிறர் வயலில் மேய்ந்து விட்டால், தம் வயலின் சிறந்த விளைச்சலினின்றும், தம் திராட்சைத் தோட்டத்தின் சிறந்த பலனினின்றும் ஈடுசெய்வார்.*

> *தீப்பிடித்து, முட்புதர்களில் பரவ, தானியக் குவியலோ விளைந்த பயிரோ வயலோ எரிந்து விட்டால், தீயை மூட்டியவர் ஈடு கொடுத்தே ஆகவேண்டும். (வி.ப. 22 5-6)*

மேற்காண்பவை, அன்றைய இடையர், வேளாண் தொழில் செய்வோர்க்குக் கூறப்பட்டவை போலத் தோற்றமளிப்பதாலேயே எக்காலத்தவர்க்கும் பொருந்தும் வகையில், புதிய ஏற்பாட்டால், புதிய உலகைப் படைக்க வழிகாட்டிய இயேசு பின் வருமாறு கூறுகிறார்.

> மற்ற மனிதர் செய்யும் குற்றங்களை நீங்கள் மன்னிப்பீர்களானால் உங்கள் விண்ணகத் தந்தையும் உங்களை மன்னிப்பார். (மத்தேயு 6:14)
>
> கலப்படம் செய்வோரை, எடை குறைத்து விற்போரை, திருடுபவர்களை நாம் மன்னிப்பதே நமக்கு நலம் பயக்கும் என்று கூறியதோடு,
>
> மண்ணுலகில் உங்களுக்கெனச் செல்வத்தைச் சேர்த்து வைக்க வேண்டாம். இங்கே பூச்சியும் துரும்பும் அழித்து விடும்; திருடரும் அதைக் கன்னமிட்டுத் திருடுவர்.
>
> ஆனால், விண்ணுலகில் உங்கள் செல்வத்தைச் சேமித்து வையுங்கள்; அங்கே பூச்சியோ, துரும்போ அழிப்பதில்லை; திருடரும் கன்னமிட்டுத் திருடுவதில்லை. உங்கள் செல்வம் எங்கு உள்ளதோ அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும். (மத்தேயு 6: 19-21)

எனவும் கூறுகிறார்.

எனவே, நிலையான உடைமைகள் திருடுபோகா; நிலையற்றவை மட்டுமே போகும் என்பதால் தம் உள்ளம் நிலையானவை நோக்கியே இருக்க வேண்டும் என எக்கால மனிதரும் புரிந்து கொள்ள வேண்டிய, புகழுடைய பொன்விதியாக,

> ஆகையால் பிறர் உங்களுக்குச் செய்ய வேண்டும் என விரும்புகிறவற்றையெல்லாம் நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். இறைவாக்குகளும் திருச்சட்டமும் கூறுவது இதுவே (மத்தேயு 7:12)

என நாம் களவு செய்யாமலிருந்தால், நாம் நேர்மையோடு நடந்தால் நம்பொருள் களவு போனது என உறுதி அளிக்கும் வகையில் கூறுகின்றார். இந்த உறுதி களவு செய்தலுக்கு மட்டுமல்லாமல் அனைத்துத் திருசட்டங்கட்கும் பொருத்தமான ஒன்றாகும்.

**களவு மதிகேடான செயல்**

விவிலியத்தின் அறநூல்களில் ஒன்றாகிய நீதிமொழிகள் அனைத்து அறங்களையும் வலியுறுத்தும் ஒரு ஞான நூல். களவு என்பது மதிகேடான செயல் என்பதை இவ்வாறு அது விளக்குகிறது.

> *மதிகேடு என்பதை அறிவில்லாத, எதற்கும் கவலைப்படாத ஒரு பெண்ணுக்கு ஒப்பிடலாம். அவள் தன் வீட்டு வாயிற் படியிலோ, நகரின் மேடான இடத்திலோ உட்கார்ந்து கொண்டு, தம் காரியமாக வீதியில் செல்லும் வழிப் போக்கரைப் பார்த்து "அறியாப் பிள்ளைகளே இங்கே வாருங்கள்" என்பாள். "திருடின தண்ணீரே இனிமை மிகுந்தது. வஞ்சித்துப் பெற்ற உணவே இன்சுவை தருவது" என்பாள். அந்த ஆட்களோ, அங்கே செல்வோரோ உயிரை இழப்பர் என்பது அறியார்; அவளுடைய விருந்தினர் பாதாளத்தில் கிடக்கின்றார் என்பது அவர்கட்குத் தெரியாது. (நீதிமொழிகள் 9 : 13-18)*

ஒவ்வொரு தொழில் செய்வோர் தம் தொழிலில் நேர்மையுடன் செய்ய வேண்டுமென வலியுறுத்தும் நீதிமொழிகள்,

> *கன்னத் துளைக்கோல் ஆண்டவருக்கு அருவருப்பானது; முத்திரையிடப்பட்ட கல்லே அவர் விரும்புவது. (நீதிமொழிகள் 11-1)*

என்றும்

> *பொய்யான எடைக் கற்களையும், பொய்யான அளவைகளையும் பயன் படுத்துகிறவரை ஆண்டவர் வெறுக்கிறார். (நீதிமொழிகள் 20-10)*

என்றும்

> எவர் களங்கமற்ற நேர்மையான வாழ்க்கை நடத்துகிறாரோ அவருடைய பிள்ளைகள் அவரின் காலத்திற்குப் பின் நற்பேறு பெறுவார்கள். *(நீதிமொழிகள், 20-7)*

என்றும் நேர்மையான வாழ்க்கை வாழையடி வாழையாக வரும் தலைமுறைகளையும் வாழ வைப்பது என வாழ்த்தும் மொழியாக உள்ளது.

**களவாட விரும்பினால் துயில் இல்லை**

களவால் பெற்று விடலாமா எனச் சிறிது நேரச் சிந்தனை கூட ஒருவரை 'மனத்துக்கண் மாசு படிந்தவர்' ஆக்கி விடும் என்பதால், கள்ளாமையைத் தீவினையாகக் கருதி அஞ்ச வேண்டும் எனக் கூறும் நாலடியார்,

> ***உள்ளத்தால் நள்ளாது, உறுதித் தொழிலர் ஆய்***
> ***கள்ளத்தால் நட்டார் கழி கேண்மை- தெள்ளிப்***
> ***புனற் செதும்பு நின்று அலைக்கும் பூங்குன்ற நாட***
> ***மனத்துக்கண் மாசுஆய் விடும்*** ***(நாலடியார் 128)***

என நவில்கிறது.

நாம் வாழ்வதற்குப் பொருள் தேவைதான் என்பதை மறுப்பதற்கில்லை. ஆயினும், பொருளைப் பூட்டி வைக்காமல் நல்ல காரியங்களிலே செலவிட்டு வாழ்தலே விவேகமானது என்று வாழ்வில் நடைமுறையை வழங்கு மொழியில் கூறும் பழமொழி காய வைத்த வற்றலைக் கண் சிமிட்டும் நேரத்தில் காக்கைக் கூட்டம் கவர்ந்து உண்பதைப் போல, பொருளைக் காப்பவரைவிட அதனைத் திருடப் பார்ப்பவரே அதிகமாக உள்ளனர் என்பதைப் பின்வரும் பாடல் பகர்கிறது.

> ***நோக்கி யிருந்தார் இமைக்கும் அளவின்கண்***
> ***ஒப்பப் படினும் உணங்கலைப் புள் கவரும்***
> ***போற்றிப் புறந்தந்தக் கண்ணும் பொருளினைக்***
> ***காப்பாரிற் பார்ப்பார் மிகும்*** ***(பழமொழி 259)***

**ஒப்படைக்கப்பட்ட பொருளைக் கவர்தல்**

நம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொருளைக் கொடுத்தவர் கேட்டால் உடனே கொடுக்காவிட்டாலும் அது களவுதான்.

அத்தகைய செல்வம் ஒருபோதும் நிலைக்காது என மேலும் வலியுறுத்தும் பழமொழி

**உள்ள தொருவர் ஒருவர்கை வைத்தக்கால்**
**கொள்ளும் பொழுதே கொடுக்கத் தாம்-கொள்ளார்**
**நிலைப் பொருள் என்றதனை நீட்டித்தல் வேண்டா**
**புலைப் பொருள் தங்கா வெளி (பழமொழி 17)**

எனும் பாடல் அக்கருத்தைத் தெளிவு செய்கிறது. மேற்காணும் பழமொழியின் கூற்றினைத் திருவிவிலியம் பிரதிபலித்துக் கடவுள் முன் நீதிக்கு நிற்கச் செய்யும் குற்றமாகக் கூறப்பட்டுள்ளதை ஒப்பு நோக்கிடலாம்.

ஒருவர் பிறரிடம் பணத்தையோ, பொருள்களையோ பாதுகாப்புக்காக ஒப்படைத்திருக்க, அவை அம்மனிதர் வீட்டிலிருந்து களவுபோய்த் திருடர் கண்டு பிடிக்கப்படாவிடில், பிறர் பொருள்களில் வீட்டுத் தலைவர் கைவைத்தாரா இல்லையா என மெய்ப்பிக்க அவர் கடவுள் முன் நிற்பார்.
(விடுதலைப் பயணம் 22: 7-8)

பிறர் பொருளைக் கவர நினைப்பவர்க்குத் தூக்கம் கூடப் போய்விடும் என்பதால் கள்ளத்தனமாகப் பொருளை அடைய எண்ணல் ஆகாது. தீவினையால் நிலையற்ற செல்வம் சேர்க்க எண்ணினாலும், சேர்த்த பொருளைக் காக்க எண்ணினாலும் துயில் இல்லை என்பதை,

**கள்வம் என்பார்க்கும் துயில் இல்லை; காதலி மாட்டு**
**உள்ளம் வைப்பார்க்கும் துயில் இல்லை; ஒண்பொருள்**
**செல்வம் என்பார்க்கும் துயில் இல்லை; அப்பொருள்**
**காப்பார்க்கும் இல்லை, துயில்**
**(நான்மணிக்கடிகை 7)**

என நான்மணிக் கடிகையும் எச்சரிக்கிறது.

"தொடர் இன்னா, கள்ளர்கண்" எனச் சிறுபஞ்சமூலம் (12) கள்வருடைய தொடர்பும் இடும்பை தரும் என்றும் அதனால் பிறன் பொருள் வவ்வன்மின் (24) என்றும் இயம்புகிறது.

*பிறர் மனை, கள், களவு, சூது, கொலையோடு*
*அறன் அறிந்தார், இவ்வைந்தும் நோக்கார் திறன் இலர்*
*என்று*
*எள்ளப் படுவதூஉம் அன்றி, நிரயத்துச்*
*செல்வழி உய்த்திடுத லான் (ஆசாரக்கோவை 37)*

என ஐந்து பெருங்குற்றங்கள் புரிவோர் நரகத்திற்குச் செல்வது நிச்சயம் எனக் கூறுகிறது ஆசாரக்கோவை.

உணவு உண்பதற்காகக் கூட, இறைச்சிக்காகப் பிற உயிர்களைக் கொல்லாமலும், பிறர் பொருளை அடைவதற்காகப் பொய் சொல்லாமலும், அத்தகைய கீழ்மக்களோடு தொடர்பு இல்லாமலும் தீய சொற்களைக் கேடகாமலும், சொல்லாமலும் இருப்பவரே இறைவனை நன்கறிந்த பெரியவர்களது பண்பு என எடுத்துக் காட்டுகிறது ஏலாதி.

*கொல்லான், கொலை புரியான், பொய்யான்,*
*பிறர்பொருள்மேல்*
*செல்லான், சிறியோர் இனம் சேரான், சொல்லும்*
*மறையில் செவி இலன், தீச்சொற்கண் மூங்கை*
*இறையில் பெரியாற்கு இவை (ஏலாதி 19)*

என்பது அக்கருத்தமைந்த பாடல்.

### கள்வரோடு தொடர்பு தீதே

கள்ள மனம் கொண்டவரோடு வெள்ளையுள்ளம் கொண்டிருப்பவர் தொடர்பு வைத்துக் கொண்டால் அவர்தம் பொருளெலாம் இழந்து பள்ளத்திலே வீழ்வது உறுதி. இன்னாதவற்றை எடுத்தியம்பும் இன்னா நாற்பது, குடிகாரன் பேச்சு, முட்காட்டில் நடத்தல், வெள்ளத்தில் கோரச் சாவு இவற்றையெல்லாம் தாண்டிக் கள்ள மனத்தார் தொடர்பு இன்னாத பயக்கும் எனப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

*கள் உண்பான் கூறும் கருமப் பொருள் இன்னா;*
*முள்ளுடைக் காட்டில் நடத்தல் நனி இன்னா*
*வெள்ளம்படு மாக்கொலை இன்னா; ஆங்கு இன்னா*
*கள்ள மனத்தார் தொடர்பு (இன்னா நாற்பது 33)*

**சூத்திரம் செய்தலின், கள்வன் ஆதல் அறிப**

*(முதுமொழிக்காஞ்சி 17)*

என அறிவுப்பத்தில் ஒன்றாகக் கூறும் முதுமொழிக் காஞ்சி,

**வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்**
**மிகுதி வேண்டுவோன் தகுதி தண்டான்**

*(முதுமொழிக்காஞ்சி 95,96)*

என்று வஞ்சகத்தால் வாழ்வு பெற இயலாது என்பதையும் அளவுக்கதிகமாக ஆளப்படுவான் அவற்றை அனுபவிக்கும் தகுதியை இழப்பான் என்றும் ஞானப்பாலைத் திரட்டித் தருகிறது. அளவுக் கதிகமான ஆசையால் பிறர் பொருளை விரும்பி, அதனை அடைவதற்காக வஞ்சக எண்ணத்துடன் பொய்ச் சான்று கூறுவது சாதாரண வாழ்வில் மலிந்து காணப்படுகிறது. இதுவும் இறைவனின் திருச்சட்டத்தில் தகாத செயல் எனக் கூறப்பட்டுள்ளதால் பிறர்க் கெதிராகப் பொய்ச்சான்று கூறுவதைப் பற்றிப் பின் வரும் பக்கங்களில் ஆய்வோம்.

# 11. பொய்ச்சான்று சொல்லாமை

*உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்*
*உள்ளத்தில் எல்லாம் உளன் (திருக்குறள்-294)*

**வாய்மையின் மேன்மை**

இறைவனை நேருக்கு நேர் காண்பதற்கும், தொலை தூரத்திலிருந்து உண்மையின் உருவைக் காண்பதற்கும் வித்தியாசம் உண்டு. இமய மலையின் உச்சிக்கு நாம் ஏறிச் சென்று மலையின் முழுப் பரிமாணத்தையும் கண்களால் நோக்கும்போது "நேருக்கு நேர்" காண்பதாகும். தொலை தூரத்தில் பயணிக்கும்போதே நம் கண்ணில்படும் மலையின் ஒரு பக்கத்தைக் காண்பது வேறாகும். ஆயினும், மலை ஒன்றுதான். பார்வை, பார்ப்பவர் இடத்திலிருந்து வேறுபடுகிறது. அதைப் போலவே, வாய், மெய்யைப் பேசும் போதுதான் அது 'வாய்மை' ஆகிறது. தீமை இலாத சொல்லாக அது இருக்கும்போதுதான் அது வாய்மை ஆகும். தீமை பயக்கும் சொல்லாயின் அது பொய்மை ஆகிவிடுகிறது. வாய்மையின், உண்மையின் முழு உருவம் இறைவன் என்பதாலேயே,

**யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லைஎனைத்து ஒன்றும்**
**வாய்மையின் நல்ல பிற (திருக்குறள் 300)**

என 'மெய்யாக் கண்டவற்றுள்' என வள்ளுவர் மெய்ப் பொருளையே வாய்மையின், வரமாகக் கண்டதாகக் கூறுகிறார்.

**வாழ்வும் சாவும் நாவாலே**

இவ்வாறு வாய்மை அல்லாத, தீமை பயக்கும் சொல்லாகிய 'பொய்', தன்னைத்தான் காத்துக் கொள்வதற்காகவும், பிறரை வஞ்சித்துச் சிக்கலில் மாட்டி

விடவும் வல்லது என்பதாலேயே, அதனை அறவே தவிர்த்து வாழவேண்டும் என அறநூல்கள் வலியுறுத்துகின்றன.

மேன்மக்கள் யார் என்பதைப் பட்டியலிட்டுக் கூறும் நாலடியார்,

> **கள்ளார், கள் உண்ணார், கடிவ கடிந்து ஒரீஇ,**
> **எள்ளிப் பிறரை இகழ்ந்து உரையார், தள்ளியும்**
> **வாயின்பொய் கூறார் – வடு அறு காட்சியார்**
> **சாயின் பரிவது இலர்** (நாலடியார் 157)

எனக் கூறுவதோடு,

> **கடித்துக் கரும்பினை கண் தகர நூறி**
> **இடித்து நீர் கொள்ளினும் இன் சுவைத்தே ஆகும்**
> **வடுப்பட வைது இறந்தக் கண்ணும் – குடிப்பிறத்தார்**
> **கூறார் தம்வாயின் சிதைந்து** (நாலடியார் 156)

என்கிறது. வாழ்வில் களங்கம் ஏற்பட்டு இறக்க நேரிட்டாலும் வாய்மை சிதைந்து பொய் சொல்லமாட்டார் நற்குடிப்பிறந்தவர் எனப் பகர்கிறது.

பொய்யைச் சொல்லாமல் வாய்மையால் கடைப்பிடிப்பது மிகவும் கடினமான ஒன்று.

பொய்யின்றி மெய் பேசி வாழ்வது வாழ்வில் கடைப்பிடிக்கக் கடினமான ஒரு கடமை என்பதாலேயே உலக வாழ்வில் இதனை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என நம் முன்னோர், பல அறிவுரைகளைக் கூறி உள்ளனர்.

> ஒருவர் நாவினால் எதை விதைக்கிறாரோ அதையே உண்பார்; தம் பேச்சின் விளைவையே அவர் துய்த்தாக வேண்டும்.
>
> வாழ்வதும் நாவாலே, சாவதும் நாவாலே; வாயாடுவோர் பேச்சின் பயனைத் துய்ப்பர்
> (நீதிமொழிகள் 18:20,21)

எனத் திருவிவிலியம் நாவடக்கத்தையும், பொய் கூறலையும் கலந்து எச்சரிக்கிறது.

மேலும், பொய்ச் சான்று கூறுவது நல்லதல்ல என்பதை,

*பொய்ச்சான்று கூறுபவன் கெட்டழிவான்;*
*உன்னிப்பாய்க் கேட்பவன் பேச்சோ என்றைக்கும்*
*ஏற்புடையதாகும் (நீதிமொழிகள் 20:28)*

எனப் பொய்மையைப் பேசாதொழித்து, கேள்வி ஞானத்தில் சிறந்து விளங்க வேண்டும் என வலியுறுத்துகிறது. இவ்வாறு தம் நண்பர்க்கு எதிராக, அடுத்திருப்பவர் மீது பொய்ச்சான்று கூறுபவர் எத்தகையவர் என்பதை

*அடுத்திருப்பார்க்கு எதிராகப் பொய்ச்சான்று சொல்பவர்*
*குறுந்தடியையும், வாளையும், கூரிய அம்பையும் ஒத்தவர்*
*(நீதிமொழிகள் 25-18)*

என அத்தகைய ஆயுதங்களைக் கொண்டு கொலை செய்பவருக்கு ஒப்பானவர்கள் என்று கூறுவதோடு

*வாக்குப் பிறழாத சாட்சி பொய்யுரையான்;*
*பொய்ச் சாட்சியோ, மூச்சுக்கு மூச்சு பொய் பேசுவான்*
*(நீதிமொழிகள் 14-5)*

எனப் பொய்ச் சாட்சி சொல்வோரின் இயல்பை எளிய மொழியில் மொழிகிறது.

*உண்மைச் சான்று உயிரைக் காப்பாற்றும்;*
*பொய்ச்சான்று*
*ஏமாற்றத்தையே தரும் (நீதிமொழிகள் 14-25)*

என உண்மை பேசுவதால். தன் ஆன்மாவைக் காத்து, பிறர் உயிரைக் காப்பதுடன், பொய்ச் சான்று பிறர் உயிரைக் முடித்தாலும், சான்றுரைப்பவர், சாகடிக்கப்பட்டவர் ஆகிய இருவர்க்குமே ஏமாற்றம் அளிக்கும் என்பதை

*ஒருபாதை ஒருவர்க்கு நல்வழி போலத் தோன்றலாம்;*
*முடிவிலோ அது சாவுக்கு நடக்கும் பாதையாகி விடும்*
*(நீதி மொழிகள் 14:12)*

என முன்கூட்டியே கணித்துச் சொல்கிறது.

**நல்லான் ஒருவனைப் பொய் சிதைக்கும்**

மூச்சுக்கு மூச்சு பொய் பேசி, நல்லவர் போன்று வேடமிட்டு வாழ்பவர் ஒருநாள் தாம் சொல்லும் பொய்ப் பேச்சால் அகப்பட்டு மாள்வர் என்பதை, மணலில் மூழ்கி வாழும் தவளை தன் குரலை எழுப்பித் தான் இருக்குமிடத்தைக் காட்டி அழிவு அடையும் என்பதைப் போல அழிவர்.

> **பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்**
> **சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்–நல்லாய்**
> **மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்**
> **நுணலுந் தன் வாயால் கெடும்** *(பழமொழி–184)*

எனப் பழமொழி பாங்குடன் எடுத்துரைக்கிறது.

"நான்கு இரத்தினத் துண்டங்கள்" ஆக அறவுரை கூறும் நான்மணிக் கடிகை-ஒற்றுமையிலா வாழ்வு பெற்ற நிதியனைத்தையும் அழிக்கும். நல்லான் ஒருவனின் பொன் போன்ற மேனியும் பொய் சொல்வதால் அழியும். எந்தக் கலத்தில் பால் ஊற்றப்படுகிறதோ அதற்கேற்ப அதன் சுவை அழியும். சேரக் கூடாத மனிதனோடு சேர்ந்தால் குலமே அழிந்துவிடும் எனும் பொருள்பட, பின் வரும் பாடலில் பொய் பேசுவதன் பலன் அழிவே என ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறது.

> மொய் சிதைக்கும், ஒற்றுமை இன்மை, ஒருவனைப்
> பொய் சிதைக்கும், பொன் போலும் மேனியை; பெய்த
> கலம் சிதைக்கும், பாலின் சுவையை; குலம் சிதைக்கும்
> கூடார் கண் கூடி விடின் *(நான்மணிக் கடிகை, 21)*

என்பது அக்கருத்தமைந்த பாடல்.

நல்லாதனார் நவின்ற அருமருந்தாகிய திரிகடுகம், தீமையை மனதாலும் சொல்லாலும் செய்யக் கூடாது என்பதைத் தவத் திரு மனிதர் கொள்கையாகக் கொண்டவர் ஆவர் என்பதை,

> **தூய்மை உடைமை துணிவு ஆம்; தொழில் அகற்று**
> **வாய்மை உடைமை வனப்பு ஆகும்; தீமை**

**மனத்தினும் வாயினும் கொல்லாமை – மூன்றும்**
**தவத்தின் தருக்கினார் கோள் (திரிகடுகம்-78)**

என, தூய்மை, வாய்மை, பொய்யாமை ஆகியவற்றை வலியுறுத்துகிறது.

எத்தனை கெட்டவராக, அறிஞராக, தவக் குன்றாக, நட்புடன் விளங்குபவரும் பொய் பேசினால் அத்தனையும் அழிந்து போய் ஒன்றுமில்லாமற் போய் விடும் என்பதைத் திரிகடுகம்,

**உப்பின் பெருங்குப்பை, நீர் படின், இல்லாகும்;**
**நட்பின் கொழுமுளை, பொய் வழங்கின் இல்லாகும்;**
**செப்பம் உடையார் மழை அனையர்-இம் மூன்றும்**
**செப்ப நெறிதூரா வாறு (திரிகடுகம் 83)**

எனச் செப்பமான நெறியுடன் நேரிய வாழ்க்கை வாழ்ந்திட உரைக்கின்றது.

### அழிவையே உரிமையாக்கும் பொய்

பொன்னையே பெறுவதாக இருந்தாலும் நாம் நம்முடல் அழியாமை வேண்டின் பொய்யுரைக்கலாகாது என்றும், உடல் அழியும் வழிகளைத் தவிர்க்கக் கள்ளாமை, பெண் ஆசை நீக்கிடல், ஊன் உண்ணாமை வேண்டும் என்றும் சிறுபஞ்சமூலம் பின்வரும் பாடலில், எடுத்துரைக்கிறது.

**பொய்யாமை, பொன் பெறிறும், கள்ளாமை, மெல்லியார்**
**வையாமை, வார் குழலார் நச்சினம் நையாமை**
**ஓர்த்து உடம்பு பேரும் என்று ஊன் அவாய் உண்ணானேல்**
**பேர்த்து உடம்பு கோடல் அரிது (சிறுபஞ்சமூலம் 17)**

என்பது அக்கருத்தமைந்த பாடல்.

> பொய் பேசுதல் மனிதருக்கு அருவருக்கத் தக்க கறை ஆகும். அறிவற்றோரின் வாயிலிருந்து அது ஓயாது வெளிப்படும் பொய் சொல்லும் பழக்கம் கொண்டவரை விடத் திருடன் மேலானவன். இருவருமே அழிவை உரிமையாக்கிக் கொள்வர்.

*பொய்யரின் நடத்தை இகழ்ச்சிக்கு இட்டுச் செல்லும்*
*அவர்களின் வெட்கக்கேடு அவர்களோடு*
*எப்போதும் இருக்கும் (சீராக். 20:24-26)*

**தவப்பயன் அழிக்கும் பொய்**

ஐயமின்றி மெய்ப்பொருளைக் காண விழைபவர்கள் பொய், குறளை, வெளவல், அழுக்காறு ஆகியவை பற்றி எண்ணிக்கூடப் பார்க்கமாட்டார்கள். அப்படி அவர்கள் எண்ணினால் ஐயம் புகுந்து அவர்களது தவப்பயன் அவர்களை விட்டுப் போய்விடும் எனக் கூறுகிறது ஆசாரக்கோவை.

**பொய், குறளை, வெளவல், அழுக்காறு, இவை நான்கும்**
**ஐயம் தீர் காட்சியார் சிந்தியார்; சிந்திப்பின்**
**ஐயம் புகுவித்து, அரு நிரயத்து உய்த்திடும்;**
**தெய்வமும் செற்று விடும் (ஆசாரக்கோவை 38)**

என, இறைவனே அவர்களைக் கைநெகிழ்ந்து விடுவார் என எச்சரித்து,

**படிறும், பயனிலவும், பட்டி உரையும்**
**வசையும், புறனும் உரையாரே-என்றும்**
**அசையாத உள்ளத் தவர் (ஆசாரக்கோவை 52)**

என்றும் அசையாத உள்ளத்துடன் வாழ அழைப்பு விடுக்கிறது.

**உள்ளத்தில் கள்ளமின்மை பேறு ஆகும்**

உள்ளத்தில் தூய்மை என்பது மட்டுமே கள்ளமற்ற, கலப்படமற்ற, நிபந்தனையற்ற அன்பை உடையவராக்கும்.

**தூய்மையான உள்ளத்தோர் பேறு பெற்றோர்;**
**ஏனெனில் அவர்கள் கடவுளைக் காண்பர்**
**(மத்தேயு:5.8)**

என இறைமகன் இயேசு மலைப் பொழிவில் பேறு பெற்றோரில் ஆறாவது பேறு பெற்றோராக உள்ளத் தூய்மை உடையவர் கடவுளைக் காண்பர் என மொழிந்துள்ளார். பொய்யாணை இட்டுச் சாட்சி சொல்வது, தம் குற்றத்தை மறைப்பது இவற்றைப் பற்றிக் குறிப்பிட்டு அவர் கடவுளின் கட்டளைகளைத் தமது புதிய கோணத்தில் விளக்கமளித்த போது பின் வருமாறு மொழிந்துள்ளார்.

மேலும் பொய்யாணை இடாதீர் ஆணையிட்டு நேர்ந்து கொண்டதை ஆண்டவருக்குச் செலுத்துவீர் என்று முற்காலத்தவர்க்குக் கூறப்பட்டிருப்பதைக் கேள்விப் பட்டிருக்கிறீர்கள்.

ஆனால் நான் அவர்களுக்குச் சொல்கிறேன். ஆணையிடவே வேண்டாம். ஏனென்றால் அது கடவுளின் அரியணை.

மண்ணுலகின் மேலும் வேண்டாம். ஏனெனில் அது அவரின் கால்மனை. எருசலேம் மேலும் வேண்டாம். ஏனெனில் அது பேரரசரின் நகரம்.

உங்கள் தலைமுடியின் மேலும் வேண்டாம். ஏனெனில் உங்கள் தலைமுடியில் ஒன்றையேனும் வெள்ளையாக்கவோ கறுப்பாக்கவோ உங்களால் முடியாது.

ஆகவே நீங்கள் பேசும்போது 'ஆம்' என்றால் 'ஆம்' எனவும் 'இல்லை' என்றால் 'இல்லை' எனவும் சொல்லுங்கள். இதைவிட மிகுதியாகச் சொல்வது எதுவும் தீயோரிடமிருந்து வருகிறது

*(மத்தேயு 5: 33-37)*

### பெருமையை அழிக்கும் பொய்ச்சான்று

பொய்தீர் புலவர் பொருள் புரிந்து ஆராய்ந்த மைதீர் உயர்கதியின் மாண்பினை மேற்கண்ட இயேசுவின் மொழிகளை வாழ்வில் அனைவரும் கடைப்பிடிக்க, நுணங்கிய நூல் நோக்கி வாழ்வதே பழி இல்லா வாழ்வு ஆகும். அவ்வாறு வாழ்பவன் தானும் வாழ்ந்து பிறரையும் வாழ வைப்பவன் இந்த நற்பண்புகள் விளக்கப் போந்த ஏலாதி ஆசிரியர் கணிமேதாவியார்,

**பொய்யான், பொய் மேவான், புலால் உண்ணான், யாவரையும்**
**வையான், வழி சீத்து, வால் அடிசில் நையாதே**
**ஈத்து உண்பான் ஆகும். இருங் கடல் சூழ் மண் அரசாய்ப்**
**பாத்து உண்பான், ஏத்து உண்பான் பாடு**

**(ஏலாதி 44)**

எனப் பறை சாற்றுகிறார்.

பொய்ச்சாட்சி சொல்வதன் மூலம் பெருமையோடு வாழ்பவரின் பெருமையை அழிக்க நினைப்பதும் குற்றம் என்பதால்,

**பெருமை உடையாரைப் பீடு அழித்தல் இன்னா**
**(இன்னாநாற்பது 26)**

என இன்னா நாற்பதும், இனிது இயம்புகிறது.

எவரையும் தீமை ஏற்படும் வகையில் பொல்லாங்கு உரையாமை சாலச்சிறந்தது எனக் கூற முற்படும் இனியவை நாற்பது.

**கொல்லாமை முன் இனிது; கோல் கோடி, மா ராயன்**
**செய்யாமை முன் இனிது; செங்கோலன் ஆகுதல்**
**எய்தும் திறத்தால், இனிது என்ப; யார் மாட்டும்**
**பொல்லாங்கு உரையாமை நன்கு**
**(இனியவைநாற்பது 5)**

என "நாட்டார் புறங்கூறான் வாழ்தல் நனி இனிதே" (19) என இசைபட எடுத்துரைக்கிறது.

**பொய் வேளாண்மை புலமையின் துவ்வாது** (36)

எனத் துவ்வாப் பத்தில் ஒன்றாக முதுமொழிக் காஞ்சியில் மதுரைக் கூடலூர் கிழார் உலகியல் பொருள் உணர்ந்திடும் வகையில் உரைத்துள்ளார்.

எனவே, அடிப்படையில் மனிதர் பொய் பேசுவது, பொய்ச் சாட்சி சொல்வது, பொய்யாணை இடுவது, பொய் வழக்குப் போடுவது போன்றவை அனைத்துக்கும் ஆசையே காரணம். அதிலும், பிறர் பொருள் மீதான ஆசை என்பதால் அது குறித்துப் பின்வரும் பக்கங்களில் காண்கிறோம்.

# 12. பிறன் பொருள் விழையாமை

*அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறன் அறிந்து*
*தீது இன்றி வந்த பொருள் (திருக்குறள் 754)*

### மறந்தும் பிறன்பொருள் விழையாமை

ஆன்மாவை இழக்கும்போது நிகழ்கிறதே அன்றி அது பிறரால் அவனுக்கு ஏற்படுத்தப்படும் இழப்பு அல்ல என்பதே ஆன்மிகவாதிகளின் வாதம். ஆயினும் மண்ணுலக வாழ்வில் அவன் வாழும்போது அவனுக்கு அடிப்படைத் தேவைகளை உணவு, உடை, உறையுள் இவற்றைப் பிறர் விரும்பி அவனுக்கு இழப்பு ஏற்படுத்துவதைக் காண்கிறோம்.

சின்னஞ் சிறு வயதில், அடுத்த குழந்தையின் கையில் உள்ள பொம்மை மீது ஆசை ஏற்பட்டு அதனை வெடுக்கென ஒரு குழந்தை பிடுங்கிக் கொள்கிறது. அதன் பெற்றோர் அதனைக் கடிந்து அதனைத் திருத்துகின்றனர். யாரும் சொல்லிக் கொடுக்காமலே இத்தகைய ஆசை குழந்தை மனதில் உருவாவதற்கு மரபு அணுக்கள் காரணம் என அறிவியல் விளக்கமும் தரப்படுகிறது. ஆனால் வளர்ந்த பிறகு, நல்லது எது கெட்டது எது எனப் பாகுபடுத்திப் பார்க்கும் திறம் அடைந்த பிறகு இத்தகைய ஆசைகள் கட்டுப்படுத்தப்படவேண்டும்; பிறர் பொருள் மீது ஆசை மனதில் ஏற்படுவதைக் கூடப் பாவமாகக் கருதி வருந்த வேண்டும் என்ற உன்னதக் கட்டளை இறைவனாலேயே அளிக்கப்பட்டுள்ளது. பிறன் பொருள்தனை விரும்பி, அதனை வஞ்சத்தால் பெறும் தீவினை அஞ்சப்பட வேண்டிய ஒன்று. அது பிறர்க்கு உடைமை இழப்பும், மன வருத்தமும் விளைவிப்பதுடன் இழந்தவர் பார்வையில் திருடனாக, சந்தேகத்திற்கு உரியவனாகச் சமுதாயத்தில் பிரித்து வைக்கப்படும் நிலைக்குத் தள்ளிவிடும். மறந்தும் கூட, பிறர்க்கு இத்தகைய கேடு விளைவிக்க நாம் எண்ணக்கூடாது என்பதாலேயே

*மறந்தும் பிறன் கேடு சூழற்க சூழின்*
*அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு* (திருக்குறள் 204)

என்று அஞ்ச வேண்டியதொரு தீவினையிது என வள்ளுவர் எச்சரிக்கிறார்.

> வழிவழிச் சொத்தின் எல்லையை மாற்றி அமைக்காதே. உன் நிலத்தின் எல்லையைத் தள்ளித் தள்ளித் திக்கற்றவர்களின் நிலத்தை எடுத்துக் கொள்ள முயலாதே. ஏனெனில் அவர்களின் மீட்பர் வல்லவர். அவர் அவர்களின் சார்பில் உனக்கெதிராக வழக்காடுவார்.
> (நீதிமொழிகள் 23:10,11)

### தீராத நோய் துறவிக்கும் உண்டு

இந்தக் கொடிய பழக்கம், சிலருக்கு ஒருவித மன நோய் போல் அமைந்து விரும்புவதைக் கவர்ந்திடத் தூண்டும். அனைத்தையும் துறந்த துறவி என ஒரு குருவிடம் பயிலச் செல்லும் சீடத் துறவிகட்கும் இப்பழக்கம் கேடு விளைவிக்கும். ஒரு துறவற மடத்தில் அன்றாடம் பொருட்கள் களவு போயின. இந்தக் களவைச் செய்பவர் சீடர்களில் ஒருவர் என்பதைப் பிற சீடர்கள் கண்டு பிடித்து விட்டனர். குருவிடம் சென்று அவரைப் பற்றிப் புகாரிட்டனர். குரு அவரை ஒன்றும் சொல்லவில்லை. மாறாக, அதற்குப் பின்னரும் களவுகள் தொடர்ந்தன. திருட்டு வேலை செய்யும் அந்தச் சீடருக்குத் தன்னைப் பற்றிப் புகாரிடப் பிற சீடர்கள் குழுமியிருப்பதும் தெரிந்தது. அவர்கள் களவாடும்சீடர், துறவியாகத் தகுகுதியற்றவர் என்பதால் அவரை வெளியேற்ற வேண்டும் என வேண்டினர். ஆனால் அவர்களுடைய குரு கூறினார்:

> நீங்கள் அனைத்தையும் புரிந்து கொண்டுள்ளீர்கள். உங்களுக்கு ஞானம் பெற வேண்டும் என்ற அவாவில் இம்மடத்திற்கு வந்தவரை நாம் வெளியேற்றினால் அவர் எவ்வாறு ஞானம் பெறுவார், முக்தி அடைவார்

எனக் கேள்வியாகப் பதிலளித்தார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த அந்தக் களவாணிச் சீடர் மனம் வருந்தித் தம்

பிழைகளைக் குருவிடம் சொல்லித் திருந்தி வாழ்ந்தார் என்று பாரம்பரியக் கதை ஒன்று உள்ளது.

தம்மைவிட உயரிய குணங்களுடைய பெரியோரது சேர்க்கையால் மட்டுமே நோய் போல் ஒருவரைப்பாதிக்கும் இப்பழக்கத்தைக் கைவிட இயலும் என்பதாலும், அதே பழக்கமுள்ளவருடன் சேர்ந்தால் இப்பழக்கம் நீடிக்கும் என்பதையும் வலியுறுத்திக் கூற வந்த சிறுபஞ்ச மூலம்,

**பெருங்குணத்தார்ச் சேர்மின்; பிறன் பொருள்**
**வவ்வன்மின்;**
**கருங்குணத்தார் கேண்மை கழிமின்; ஒருங்கு உணர்ந்து**
**தீச்சொல்லே காமின்; வரும் காலன், திண்ணிதே-**
**வாய்ச் சொல்லே அன்று; வழக்கு**

*(சிறுபஞ்சமூலம் 24)*

எனக் காலன் வந்து நம்காலத்தை முடிக்கு முன்னர் நாம் கட்டாயமாகத் திருந்தி வருந்திட அழைப்பு விடுக்கிறது.

*பிற தீமைகளின் ஊருணி*

நல்லொழுக்கமே அறம் என அறிந்தவர்கள் களவு என்பது மையத் தீவினையாக இருந்து பிற தீவினைகளாகிய பிறன்மனை, கள், சூது, கொலை ஆகியவற்றிற்கு நம்மை இழுத்துச் செல்லும் என அஞ்சுவர். பிறன் பொருள் போல் பிறன் மனையையும் விரும்பி, அதற்கான மயக்கத்திற்குக் கள்ளும் அருந்தி, எளிதாகக் கிடைத்த காசினைக் கொண்டு சூதாடி, மேலும் பொருள் சேர்க்க விரும்பி, அது கிடைக்காத போது கோப வெறியில் கொலையும் செய்யும் திறம் இவர்கட்கு வந்து விடும். இந்தக் கருத்தினை, ஆசாரக் கோவை (37) கூறுகிறது.

இறைவனையே நாடி வாழும் பெரியவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய கட்டளைகளில் இவை அடங்கும் எனப் பட்டியலிட்டுக் கூறும் ஏலாதி,

**கொல்லான், கொலை புரியான், பொய்யான், பிறர்**
**பொருள் மேல்**
**செல்லான், சிறியார் இனம் சேரான், சொல்லும்**

*மறையில் செவி இலன், தீச்சொற்கண் மூங்கை*
*இறையில் பெரியாற்கு இவை* (ஏலாதி 19)

என்றும்

*குறுகான் சிறியாரை; கொள்ளான் புலால்; பொய்*
*மறுகான்; பிறர் பொருள் வெளவான்; இறுகானாய்*
*ஈடு அற்றவர்க்கு ஈவான் ஆயின், நெறி நூல்கள்*
*பாடுஇறப்ப, பன்னும் இடத்து* (ஏலாதி 41)

என்றும் பயின்று வாழ்ந்து வருவதே உசிதமானது என வகுத்துக் கூறுகிறது.

**கள்ளமனத்தார் தொடர்பும் தீதே**

பிறர் பொருளை விரும்பினாலே அதைக் கவர்ந்தமைக்கு ஒப்பாகும் என்பதாலேயே அத்தகைய மனம் படைத்தோரைக் "கள்ள மனத்தார்" எனக் கூறுவர். அத்தகைய கள்ள மனங் கொண்டோரிடம் தொடர்பு வைத்துக் கொண்டாலும் தீமையே பிறக்கும் என்பதற்குச் சிலப்பதிகாரத்தில் கோவலன் கள்ள மனம் படைத்த பொற்கொல்லனைத் தொடர்பு கொண்டு அழிந்தது காவியமாகக் கூறப்பட்டுள்ளது. இக்கருத்தினை,

***கள் உண்பான் கூறும் கருமப் பொருள் இன்னா;***
***முள்ளுடைக் காட்டில் நடத்தல் நனி இன்னா;***
***வெள்ளம்படு மாக் கொலை இன்னா; ஆங்கு இன்னா,***
***கள்ள மனத்தார் தொடர்பு*** **(இன்னா நாற்பது 33)**

எனக் கூறும் வேளையில், பிறன் பொருள் விரும்பாதவன் வாழ்க்கையே இனிமையான ஒன்றாகும் எனக் கூற முற்படும் இனியவை நாற்பது

*பிறன் கைப்பொருள் வெளவான் வாழ்தல் இனிதே*
*அறம் புரிந்து, அல்லவை நீக்கல் இனிதே*
*மறந்தேயும் மாணா மயரிகள் சேராத்*
*திறம் தெரிந்து வாழ்தல் இனிது*
(இனியவை நாற்பது 21)

என இயல்பாக எடுத்து இயம்புகிறது.

பிறர் பொருள் விரும்பி மனதில் அதனை அடையத் திட்டமிட்டால் போதும். அதுவே களவு செய்தமைக்கு நிகர்

என்ற கருத்தினை, அறிவுப் பத்து என்ற தலைப்பின் கீழ் முதுமொழிக்காஞ்சி

**சூத்திரம் செய்தலின், கள்வன் ஆதல் அறிப**
*(முதுமொழிக்காஞ்சி 2-7)*

என்பதோடு நிலையான வாழ்க்கை வேண்டுபவர் இதனைத் தவிர்க்க வேண்டும் எனக் கூற முற்பட்டு, தண்டாப் பத்து என்ற தலைப்பின் கீழ்

**வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்**
**மிகுதி வேண்டுவோன் தகுதி தண்டான்**
**இன்பம் வேண்டுவோன் துன்பம் தண்டான்**
**துன்பம் வேண்டுவோன் இன்பம் தண்டான்**
*(முதுமொழிக்காஞ்சி 10 5-8)*

என்று உலகத்து மக்கட்கெல்லாம் அறிவுரை புகட்டுகிறது.

பிறன் பொருளைப் போல் பிறன் மனை விழைவதும், அதனையொட்டிய தீய பழக்கம் என்பதில் அது குறித்துப் பின் வரும் பக்கங்களில் காண்போம்.

# 13. பிறன் மனை விழையாமை

***ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே***
***காத்த மனையாளைக் காமுறும் காளையர்***
***காய்ச்ச பலாவின் கனி உண்ண மாட்டாமல்***
***ஈச்சம் பழத்துக்கு இடர்உற்ற வாறே***

*(திருமந்திரம் 201)*

## இருள்கொண்ட சிந்தை இழிவு பெறும்

பிறன் மனை நயவாமை என்பது இறைவனாலேயே அளிக்கப்பட்ட அன்புக் கட்டளை. இக்கட்டளையை மீறினால் பிறர் முன்னிலையில் நம் மானம் பறிபோகும்; கொடியவர் கையில் உயிரை இழக்கவும் நேரிடும். அந்நியர் நம் சொத்தைத் தின்று கொழுப்பர். நாம் பாடுபட்டு ஈட்டியது அனைத்தும் வேறொரு குடும்பத்துக்குப் போகும். எலும்பும் தோலுமாய் உருக்குலைந்து, வாழ்வின் இறுதியில் கலங்கிப் புலம்ப நேரும். மீளாத் துயரில் மூழ்கி மக்கள் மன்றத்தில் மானமிழந்து தலைகுனிந்து நிற்க நேரிடும் என்பதை நீதிமொழிகள் பின் வருமாறு நெடிய அறிவுரையாக வழங்குகின்றன.

> *உன் சொந்த நீர்த் தொட்டியிலுள்ள நீரையே குடி; உன் வீட்டுக் கிணற்றிலுள்ள நல்ல தண்ணீரையே பருகு. உன் ஊற்று நீர் வெளியே பாய வேண்டுமா? உன் வாய்க்காலின் நீர் வெளியே வழிந்தோட வேண்டுமா? அவை உனக்கே உரியனவாக இருக்கட்டும்; அந்நியரோடு அவற்றைப் பகிர்ந்து கொள்ளாதே. உன் நீரூற்று ஆசி பெறுவதாக! இளமைப் பருவத்தில் நீ மணந்த பெண்ணோடு மகிழ்ந்திடு.*
>
> *(நீதிமொழிகள் 5 : 15-18)*

மருள்கொண்டு மாதர்மேல் மையல் கொள்வோர் தம் இருள் கொண்ட சிந்தை இழிவான பழிபெறும். இதனாலேயே

**'எளிது' என இல் இறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்**
**விளியாது நிற்கும் பழி (திருக்குறள் 145)**

என வள்ளுவர் சொன்னார். நீதிமொழிகளின் கருத்துக்கிணங்கச் சுருக்கித் தமக்கே உரிய இரட்டை வரிகளில் வள்ளுவம்

**பகை, பாவம், அச்சம், பழி, என நான்கும்**
**இகவாஆம் இல் இறப்பான் கண் (திருக்குறள் 146)**

எனக் குறுகத் தரித்துக் கூறுகிறது.

**பிறன் மனை நோக்கலும் குற்றமே**

ஆண்மை என்பது விலங்கு இயல்பு என்பதாலேயே அதனை ஒழுங்குபடுத்தி, "பிறர் மனை நோக்காமை பேர் ஆண்மை" என்கிறார் வள்ளுவர். நோக்கினால் ஒழுக்கம் குலையுமா? நோக்குவது தவறா என்ற கேள்விக்குப் பதிலாகத் திருவிவிலியத்தில்,

ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்கும் எவரும்
தம் உள்ளத்தால் ஏற்கெனவே அப்பெண்ணோடு
விபச்சாரம் செய்தாயிற்று (மத் : 5:26)

என இயேசுவின் திருவாய் மொழியாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

திருக்குறள் கூறும் பகை, பழி, பாவம், அச்சம் என்ற நான்கும் பிறன்தாரம் நச்சுவாரைச் சேரும். ஒழுக்கத்தின் விளைவாக ஒருவன் பெறக்கூடிய அறம், புகழ், கேண்மை, பெருமை அவனைச் சேரா என்பதை நாலடியார்

**அறம் புகழ் கேண்மை, பெருமை, இந்நான்கும்**
**பிறன் தாரம் நச்சுவார்ச் சேரா; பிறன் தாரம்**
**நச்சுவார்ச் சேரும், பகை, பழி, பாவம் என்று**
**அச்சத்தோடு இந்நாற் பொருள் (நாலடியார் 9-2)**

என்று விளக்குகிறது. அம்பினால், நெருப்பால், சூரியக்கதிர் ஒளியால் உடல் வெம்பிச் சுட்டாலும் அது புறச் சூடு மட்டுமே. ஆனால், பிறர் மனை மேல் வெம்பி மனதைச் சுடும்

இயற்கையுடைய காமம் பார்க்கும் பார்வையில்தான் வளர்கிறது என்பதை வலியுறுத்திட நாலடியார் (9-6)

**பல்லார் அறியப் பறை அறைந்து நாள் கேட்டு**
**கல்யாணம் செய்து கடி புக்க மெல் இயல்**
**காதல் மனையாளும் இல்லாளா, என ஒருவன்**
**ஏதில் மனையாளை நோக்கு ?**

என எதற்காக அடுத்தவர் மனைவியை நோக்குவது எனக் கூறுகிறது.

**இல்லறமே நல்லறம்**

இல்லற இன்பம் மட்டுமே உயரிய இன்பம் என்றும் காமம் அல்ல என்றும் வலியுறுத்தி

**அன்பின் காணியார் அன்பொடு**
**வீங்கும் இல்லறம் செய்**
**இன்பின் காதலால் இன்னுயிர்**
**தன்னிலும் எவர்க்கும்**
**நன்பின் காவலாய் நவையற**
**நயனெலா நல்கி**
**முன்பின் காசினிக்கு இணையிலா**
**முயன்றதற் களவோ (தேம்பாவணி 6:71)**

என வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணியும் தெவிட்டாத் தமிழில் தாளம் போடுகிறது.

அறநூல்களின் சாரத்தைப் பிழிந்து தரும் சிறுபஞ்ச மூலம்

**உடம்பு ஒழிய வேண்டின், உயர்தவம், மற்று ஈண்டு**
**இடம் பொழிய வேண்டுமேல், ஈகை; மடம் பொழிய**
**வேண்டின், அறிமடம், வேண்டேல், பிறர் மனை;**
**ஈண்டின் இயையும் திரு (சிறுபஞ்சமூலம் 4)**

என்கிறது.

தவமும், ஈகையும், ஒழுக்கமும், ஞானமும் பிறன்மனை நயவாமையும் உயர்வைத் தரும், திருவைத் தரும்.

## பிறன்மனை நோக்காமை

பிறன்மனை நோக்காப் பேராண்மை என்பது பெண்களை நேருக்கு நேர், கண்ணுக்குக் கண், முன்பக்கமிருந்து பார்க்காமலிருப்பது என்று தவறாகப்புரிந்து கொள்ளக் கூடாது என்பதாலேயே, பிறன் மனையாள் நடந்து சென்ற பின் அவளது பின்னழகை இரசிப்பதும் கூடாது என்பதால் அதனைப் பேதமை எனச் சாடுகிறது இன்னா நாற்பது.

**பிறன் மனையாள் பின் நோக்கும் பேதைமை இன்னா**
**(இன்னா நாற்பது 38)**

எனக் கூறி அது தீயதாகிய 'திறன் இலான் செய்யும் வினை' என்றும் அவரைக் கண்டனத்திற்கு உள்ளாக்குகிறது. இக் கூற்றினையே வழி மொழிந்து

**பிறன் மனைப் பின் நோக்காப் பீடு இனிது ஆற்ற;**
**(இனியவை நாற்பது 15)**

என இனியவை நாற்பது இசைக்கிறது.

தன் இல்லத்தரசி அல்லாமல் அனைத்துப் பெண்டிரையும் விரும்பும், உடல் பருத்த நண்டு போன்ற ஆண்களுக்குப் படுகுழி எளிதாகக் கிட்டும் என்பதை முதுமொழிக்காஞ்சி.

**பெண்டிர் வெய்யோர்க்குப் படுகுழி எளிது**
**(முதுமொழிக் காஞ்சி 8:8)**

என அவர் நிச்சயம் வெகு விரைவில் படுகுழியில் வீழ்வர் எனத் தண்டனையைத் தண்டோரா போடுகிறது.

சிலர், நேரடியாகப் பாராமல், பின்பக்கமும் பாராமல், திருட்டுத்தனமாக ஒளிந்திருந்து பார்ப்பர். இதுவும் ஒருவகை மனோ வியாதிதான் என மனோதத்துவ நிபுணர்கள் இதனைக் கூறுவர். சாதாரணமாகத் துறவி போல் காட்சி அளிக்கும் இவர்கள் நெஞ்சத்தில் துறவிகள் அல்லர். இவர்களைப் போன்ற கொடியவர்கள் வள்ளுவர் காலத்திலேயே உண்டு போலும்,

**நெஞ்சின் துறவார், துறந்தார்போல் வஞ்சித்து,**
**வாழ்வாரின் வன்கணார் இல் (திருக்குறள் 276)**

என்றும்,

**மனத்தது மாசு ஆக, மாண்டார் நீர் அடி**
**மறைந்து ஒழுகும் மாந்தர் பலர் (திருக்குறள் 278)**

என்றும் இவர்கள் புலித் தோல் போர்த்து மேயும் நரிகள் என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

**இத்தீமையின் விளைவு சாபமே**

சாதாரண மக்களாகிய நாம், உலக வாழ்வில் பற்பல சோதனைகட்கு உள்ளாகிறோம். பெரும் தவயோகிய இராவணன், சீதைமேல் ஆசை கொண்டு அழிந்த கதை இராமாயணம் ஆகியது. பெரும் ஞானியாக விளங்கிய இஸ்ரயேல் அரசன் தாபீது, யூரியின் மனைவி மேல் கொண்ட கோபத்தால், கொலைகாரனாகி, ஆண்டவர்க்குக் கோயில் கட்டத் தகுதியற்றவன் ஆனான். அரசர்களாக விளங்கியவர்கட்கே இந்தக் கதி. சதாரண மனிதர் எம்மாத்திரம். இத்தகைய மனிதர்கட்குத் திருவிவிலியம் பின்வருமாறு எச்சரிக்கை விடுக்கிறது.

*இரண்டு வகை மாந்தர் பாவங்களைப்*
*பெருக்குகின்றனர்*

*மூன்றாவது வகையினர் சினத்தைத் தூண்டி*
*விடுகின்றனர்*

*கொழுந்து விட்டு எரியும் காமவெறி*
*கொண்டோர்*

*அவர்களது காமவெறி எரிந்து அடங்கினாலன்றி அணையாது. தம் உறவினர்களோடு குறையற்ற உறவு கோள்வோர், அந்த ஆசை அடங்கும் வரை தீ நெறியை அவர்கள் விட மாட்டார்கள். தகாத உறவு கொள்வோருக்கு எல்லா உணவும் இனியதே; இறக்கும் வரை அவர்கள் தளர்ந்து போக மாட்டார்கள்.*

*பிறன் மனை நாடுவோர் என்னைப் பார்ப்பவர் யார்? இருள் என்னைச் சூழ்ந்துள்ளது. சுவர்கள் என்னை மறைத்துக் கொள்கின்றன. யாரும் என்னைக் காண்பதில்லை. நான் ஏன் கவலைப்பட வேண்டும்? உன்னத இறைவன் என் பாவங்களை நினைத்துப்பாரார் எனத் தங்களுக்குள் சொல்லிக் கொள்வர். மனிதரின் கண்கள் கண்டு விடுமோ என*

*அவர்கள் அஞ்சுகிறார்கள். ஆண்டவரின் கண்கள் கதிரவனை விடப் பத்தாயிரம் மடங்கு ஒளி படைத்தவை; அவை மாந்தரின் வழிகளையெல்லாம் காண்கின்றன; மறைந்திருப்பவற்றை அறிகின்றன என்பதை அவர்கள் அறியார்கள். அனைத்தும் படைக்கப்படும் முன்பே ஆண்டவர் அவற்றை அறிந்திருந்தார். அவற்றைப் படைத்து முடித்த பின்னும் அவற்றை அறிந்துள்ளார். காமுகர் நகர வீதிகளில் தண்டிக்கப்படுவர். எதிர்பாரத இடத்தில் பிடிக்கப்படுவர்.*

*தன் கணவரை விட்டு விலகி, வேறு ஆடவன் மூலம் அவளுக்கு வழித் தோன்றலை உருவாக்கும் மனைவிக்கும் அவ்வாறே நேரும்.*

*முதலாவதாக, அவள் உன்னத இறைவனின் திருச்சட்டத்திற்குக் கீழ்ப்படிவதில்லை; இரண்டாவதாகத் தன் கணவருக்கு எதிராகக் குற்றம் புரிகிறாள்; மூன்றாவதாக, தன் கெட்ட நடத்தையில் விபச்சாரம் செய்கிறாள்; அடுத்தவர் மூலம் பிள்ளைகளைப் பெற்றெடுக்கிறாள்.*

*அவள் சபை முன் அழைத்து வரப்படுவாள்; அவளுடைய பிள்ளைகளும் விசாரணைக்கு ஆளாவர். அவளின் பிள்ளைகள் வேரூன்ற மாட்டார்கள்; அவளின் கிளைகளும் கனி கொடா. அவள் காலத்துக்குரிய நினைவை விட்டுச் செல்வாள்; அவள் அடைந்த இழிவு ஒரு நாளும் அழியாது.*

*ஆண்டவருக்கு அஞ்சுவதை விட மேலானது எதுவுமில்லை என்றும் ஆண்டவரின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதை விட இனிமையானது எதுவுமில்லை என்றும் அவளுக்குப் பின் வாழ்வோர் உணர்ந்து கொள்வர்.*

*(சீராக். 23:16-27)*

எனவே மனத் தூய்மை, செய்வினைத் தூய்மை இரண்டும் அவன் வாழும் இனத்துக்கே தூய்மை தரும் என்பதைக் கருத்தில் கொண்டு, இத்தீய பழக்கம் இருப்பின் அதற்குத் தலை முழுகுவோம். இப்பழக்கத்திற்காக வருந்தித் திருந்துவோம். இவ்வற நூல்கள் அனைத்தும் மனித நேயமெனும் அன்பொளியை, இறையொளியைப் போதிப்பதால் அவற்றைப் பற்றி முடிவுரையில் காணலாம்.

# 14. மனித நேயம்-இறையொளி

அறநூல்கள் அனைத்தும் மனித நேயம், மனித நலம், மனித மாண்பினைப் போதிக்கும் அறிவுரைகளைக் கொண்டவை. எல்லா அறிவுரையாளர்களும் தங்கள் அறிவுரையைப் பாராட்டுவர். தன்னலமற்ற அறிவுரை கூறுவோர் மட்டுமே உயரிய அறிவுரைகள் கூற முடியும். அவை உண்மை வழியில் நம்மை வழிநடத்தும். அறிவுரைகளின் வேறுபாடு கண்டு அறிந்து அவை கூறும் உண்மையை நாம் சீரணிக்க வேண்டும். வயிறு எல்லா வகை உணவுகளையும் உட்கொள்கிறது. எனினும் ஒருவகை உணவு மற்றொன்றை விட மேலானது. உணவின் உயர்வை நாக்கு சுவைத்து அறிகிறது. அதுபோல அறிவுரைகளைக் கடைப்பிடித்து அவற்றின் பயனை நுகரும் போதே அதன் உயர்தன்மையை உணர முடியும்.

இத்தகைய அறிவுரைகளையும், திருச்சட்டங்களையும் படிப்பதில் மனதைச் செலுத்துவோர் தங்கள் முன்னோர் எல்லோருடைய ஞானத்தையும் தேடி அடைவர். பேறுபெற்றவர்களின் உரைகளைக் காப்பாற்றுவர். வழி வழியாக வரும் தலைமுறைக்கு அதனை ஊட்டுவர். இவ்வாறு இவ்வறிவுரைகளின் நுட்பங்களைக் கண்டு, உவமானங்கள், பழமொழிகள், நீதிமொழிகளின் உட்பொருளைத் தேடுவர்.

இவ்வாறு பெற்ற ஞானம் குறித்து இறைவனுக்கு நன்றி கூறி, தாங்கள் கற்றறிந்த நற்பயிற்சியைப் பிறர்க்கும் விளக்கிக் காட்டுவர். இந்த அறநூல்கள் கூறும் அறிவுரைகள், இவற்றின் ஆசிரியர்களது புகழ் ஒரு நாளும் நினைவிலிருந்து அழியாது. தலைமுறை தலைமுறைக்கும் அவர்களது பெயர் வாழும்.

> இவற்றில் ஈடுபாடு காட்டுவோர் பேறு பெற்றோர். தம் உள்ளத்தில் இவற்றை இருத்துவோர் ஞானியர் ஆவர். இவற்றைக் கடைப்பிடிப்போர் அனைத்திலும் ஆற்றல் பெறுவர். ஆண்டவனுடைய ஒளியே அவர்களுக்கு வழி. *(சீராக். 50. 28-29)*

**என்பதால் அனைவரும் இறை ஒளி தரும் வழியில் நலமுடன் வாழ ஆசிக்கிறேன்.**

| தலைப்பு | திருவிவிலியம் வசன எண் | திருக்குறள் (பாடல் எண்) | நாலடியார் | பழமொழி | நான்மணிக் கடிகை |
|---|---|---|---|---|---|
| 1. அறன் வலியுறுத்தல் | மத்தேயு 6:1 | 9, 36 | 2, 4-6 | 42 | 5 |
| | கலா. 6:4,9 | | | | |
| 2. திருச்சட்டம் | ஓசேயா 4: 1-3 | 132 | | | |
| | ஓசேயா 14 : 9 | | | | |
| | உரோ 2 : 13, 15 | | | | |
| | வி.ப. 15:26 | | | | |
| | வி.ப. 19: 16, 19-20 | | | | |
| | வி.ப. 20 : 1-3 | | | | |
| | வி.ப. 20 : 7 | | | | |
| | வி.ப. 20 : 8-17 | | | | |
| | லேவி. 19:18 | | | | |
| | திருப்பா 1:2 | | | | |
| | திருப்பா 19 | | | | |
| | 1 திமோ. 8-11 | | | | |
| | உரோ. 13: 8-110 | | | | |
| 3. அன்புடைமை | லேவி 19:18 | 71, 74 | 74 | 13, 141 | 9 |
| | யோ 13:15 | 85 | | | |
| | 1 யோ 4:19 | | | | |
| | மத். 6 : 43-45 | | | | |
| | யோ. 15:12 | | | | |

| | தலைப்பு | திருவிவிலியம் வசன எண் | திருக்குறள் (பாடல் எண்) | நாலடியார் | பழமொழி | நான்மணிக் கடிகை |
|---|---|---|---|---|---|---|
| 4. | ஒழுக்க முடைமை | பிலி 4:8-9<br>உரோ. 12:9-18 | 131, 140 | | 287 | 6 |
| 5. | தந்தை, தாய்ப் பேணல் | இணைச் சட்டம் 5:16<br>நீதி.மொ. 19:26<br>" " 23: 22,25<br>" " 28 : 24<br>எசே. 18:4<br>சீராக். 3: 3-16 | | | | 54 |
| 6. | கொல்லாமை | இணைச் சட்டம் 27:24,25<br>மாற்கு 14:21<br>மத்.26 : 3-5, 52,<br>தொ.நூ. 4:10-12<br>" " 9:6 | 322, 324 | | 164 | 58 |
| 7. | பரத்தமை செய்யாதே | சீரா.23: 16,17<br>22,23<br>மத்.. 5 : 27-32 | 348<br>918 | 375 | 24 | |

| தலைப்பு | திருவிவிலியம் வசன எண் | திருக்குறள் (பாடல் எண்) | நாலடியார் | பழமொழி | நான்மணிக் கடிகை |
|---|---|---|---|---|---|
| 8. களவு செய்யாதே | லேவி. 19: 11-13 | 281, | 128 | 150 | 07 |
| | விப. 22:1,4,5,6 | 282 | | | |
| | மத். 6:14,19,21 | | | | |
| | மத். 7:12 | | | | |
| | நீதி.மொ. 9:13-18 | | | | |
| | " " 11-1 | | | | |
| | " " 20: 10,7 | | | | |
| | விப. 22:7,8 | | | | |
| 9. பொய்ச்சான்று சொல்லாமை | நீதி.மொ. 18:20,21 | 294 | 156 | 277 | 21 |
| | நீதி.மொ. 20:28 | 300 | 157 | | |
| | " " 25: 18 | | | | |
| | " " 14: 05, 25 | | | | |
| | " " 14:12 | | | | |
| | சீராக் 20:24-26 | | | | |
| | மத். 5: 8, 33-37 | | | | |
| 10. பிறன் பொருள் விழையாமை | நீ.மொ. 23:10, 11 | 204 | | | |
| | | 754 | | | |
| 11. பிறன் மனை | நீதி மொழி 5:15-18 | 145, | 9-2 | | |

| | திரிகடுகம் | சிறுபஞ்சமூலம் (பாடல் எண்) | ஆசாரக்கோவை | ஏலாதி | இன்னா நாற்பது |
|---|---|---|---|---|---|
| 1. அறன் வலியுறுத்தல் | | 1, 26 | 37 | - | - |
| 2. திருச்சட்டம் | - | - | - | - | - |
| 3. அன்புடைமை | 68 | 66 | 79 | | |
| 4. ஒழுக்கமுடைமை | 23 | - | - | 62 | 12 |
| 5. தந்தை, தாய்ப் பேணல் | 54 | 13 | 04, 16 | - | 17 |
| 6. கொல்லாமை | 87 | 68, 08 | | 02 | 36 |
| 7. பரத்தமை செய்யாதே | 05, 24 25, 29 | 23 | 51 | | |
| 8. களவு செய்யாதே | - | 12, 24 | 37 | 19 | 33 |
| 9. பொய்ச் சான்று சொல்லாமை | 78 83 | 17 | 38 52 | 44 | 26 |
| 10. பிறன் பொருள் விழையாமை | | 24 | 37 | 19, 41 | 33 |
| 11. பிறன் மனை | | 04 | | | 38 |

| | இனியவை நாற்பது (பாடல் எண்) | முதுமொழிக் காஞ்சி (பாடல் எண்) |
|---|---|---|
| 1. அறன் வலியுறுத்தல் | 06, 21 | - |
| 2. திருச்சட்டம் | - | - |
| 3. அன்புடைமை | 09 | - |
| 4. ஒழுக்கமுடைமை | 19 | 01 |
| 5. தந்தை, தாய்ப் பேணல் | 18 | - |
| 6. கொல்லாமை | 05 | 8, 9, 10 |
| 7. பரத்தமை செய்யாதே | 10, 37 | 08 10 |
| 8. களவு செய்யாதே | - | 17, 95, 96 |
| 9. பொய்ச் சான்று சொல்லாமை | 05 19 | 36 - |
| 10. பிறன் பொருள் விழையாமை | 21 | 2-7 10: 5-8 |
| 11. பிறன் மனை விழையாமை | 15 | 8:8 |

## துணைநூல்கள்


1. *பதினெண் கீழ்க்கணக்கு, 1981, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98.*
2. *திருவிவிலியம் (பொது மொழிபெயர்ப்பு) தமிழ்நாடு விவிலியம், மறைக்கல்வி மற்றும் திருவழிபாட்டு மையம், திண்டிவனம், 1995.*
3. *திருமந்திரம், கங்கை புத்தக நிலையம், 13, தீன தயாள் தெரு, தி. நகர், சென்னை-17, 2002.*
4. *தமிழில் காப்பியங்கள், ஸ்டார் பிரசுரம், 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5, 1988.*
5. *உலகத் தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 501-கி.பி. 900) முனைவர் சோ.ந. கந்தசாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.*
6. *திருக்குறள் கூறும் உறுதிப்பொருள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1977.*
7. *பதினெண் கீழ்க்கணக்கு, கழக வெளியீடு, சென்னை, 1955.*
8. Discover your Destiny, Robin Sharma, Jaico Publishing House, Mumbai, 1988.
9. The God who loves you, Peter Kreeft, Servant Publications, P.O. Box No.8617, Ann Arbour, Michigan, 1988.
10. In Search of the Supreme, M.K. Gandhi, Navajeevan Trust, Ahmedabad, 1961.
11. The Revelation of Jesus by Larry Wilson, Wake up India, P.O. Box No. 3318, Bangalore, 1992.
12. The New Testament, Paper III, ICE, University of Madras, Chennai, 2004.
13. The Old Testament, Paper II, ICE, University of Madras, Chennai, 2004.
14. Christion Ethics, Paper VIII, ICE, University of Madras, Chennai, 2004.
15. The Spiritual Enemises of Saint Ignatious, 1995, Gujarath Sahithya Prakash, P.Box No.70, Gujarath.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| கம்பன் களஞ்சியம் | 280.00 |
| மொழியியல் நோக்கில் தொல்காப்பிய சங்க இலக்கிய ஆய்வுகள் | 40.00 |
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்று காதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| இந்தியச் சூழலில்மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் கண்ணோட்டம் | 60.00 |
| பழந்தமிழ் அறிவியல் | 45.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-1 | 100.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-2 | 100.00 |
| நீறணி பவளக் குன்றம் (ஒன்பதாம் திருமுறை ஆய்வுநூல்) | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்மூலம்-ஒருசமூகவியல் பார்வை | 30.00 |
| இந்தி நாடகப் பனுவல் (ஆடி மாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையாரின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் - ஓர் ஆய்வு | 40.00 |
| சொல்லாடல்கள் | 75.00 |

**Pub No. 656** **அறிவை விரிவாக்கும் அறநூல்கள்** **45.00**